# பதிப்புரை

பக்திப் பாடல்களை மட்டுமே எழுதுகிற கவிஞர்கள் உண்டு. தத்துவப் பாடல்களை மட்டுமே எழுதுகிற கவிஞர்கள் உண்டு. காதல் பாடல்களை மட்டுமே தீட்டுகிற கவிஞர்கள் உண்டு. இப்படி ஆளுக்கு ஒரு துறையை மட்டுமே பிடித்துக் கொண்டு செல்கிற இந்தக் காலகட்டத்தில், ஒரு கவிஞன் எல்லாத் துறையிலும், எல்லாப் பொருட்களிலும் கவிதை எழுதியிருக்கிறார் என்றால் அது போற்றுதலுக்குரியது.

வாழ்வியலின் பல்வேறு பொருட்களில் கவிஞர் சுரதா அவர்கள் தீட்டிய கவிதைகளில் இருந்தே இந்த கருத்து முத்துக்கள் தொகுக்கப் பட்டுள்ளது.

"இயற்கை"யில் இருந்து "இடுகாடு"வரையில் நூற்று ஐம்பதுக்கும் மேற்பட்ட பொருள்களில் அவர் வடித்திருக்கும் கவிதைகள் ஒவ்வொன்றுமே மிகமிகச் சிறப்பானவை.

நூலின் அளவு கையடக்கமாக இருந்தாலும் இதிலுள்ள கவிதைகளுக்குள் உலகமே அடங்கியிருக்கிறது.

இவ்வளவு எளிதாக, சிறப்பாக, தெளிவாக கவிதைகளில் கருத்துக்களைச் சொன்னவர்கள் மிகவும் அரிது. பாரதி பாரதிதாசன் வரிசையில் இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞராக விளங்கும் உவமைக்கவிஞர் சுரதா அவர்களின் கவிதைகளில் இருந்து கருத்து முத்துக்களைத் தொகுத்து வெளியிடுவதில் எமது பதிப்பகம் மிகவும் பெருமை கொள்கிறது.

அன்புடன்

ராஜேஸ்வரி கல்லாடன்

உரிமையாளர்

இளங்கோ-செழியன் பதிப்பகம்

# கவிஞர் சுரதா அவர்களின் வாழ்க்கைவரலாறு

| | | |
|---|---|---|
| பிறந்தநாள் | : | 23-11-1921 |
| பிறந்த ஊர் | : | பழையனூர் (தஞ்சை மாவட்டம்) |
| பெற்றோர் | : | திருவேங்கடம்<br>சண்பகம் அம்மையார் |
| உடன் பிறந்தவர் | : | வேதவல்லி (அக்காள்) |
| இயற்பெயர் | : | இராசகோபாலன் |
| படிப்பு | : | பள்ளி இறுதி வகுப்பு வரை |
| ஆசிரியர்கள் | : | ஆறுமுக பக்தர்,<br>சிங்காரவேலு நயினார்,<br>மெய்யக்கோனார்,<br>ரங்கசாமிப் பிள்ளை,<br>கோவிந்தராசு நாட்டார்,<br>சாமிவேலாயுதம் பிள்ளை. |
| இலக்கண ஆசிரியர் | : | சீர்காழி அருணாசல தேசிகர் |
| துணைவியார் | : | சுலோசனா அம்மையார் |
| புதல்வர் | : | கவிஞர் கல்லாடன் |
| மருமகள் | | ராஜேஸ்வரி கல்லாடன் |
| பேரக்குழந்தைகள் | : | இளங்கோவன்<br>இளஞ்செழியன் |

- உவமைக்கவிஞரின் முதல் சிறுகதை "கவி அமரன்", இது நாரணதுரைக் கண்ணன் அவர்களை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த "பிரசண்ட விகடன்" என்ற புகழ்பெற்ற வார இதழிலில் வெளிவந்தது.
- உவமைக் கவிஞரின் முதற்கவிதையின் முதல் வரிகள் :

  "நடுவிரல் போல் தலைதூக்கு-நம்
  நாட்டாரின் இன்னலைப் போக்கு"
- பாரதியின் மீது பற்றுவைத்து தனது சுப்பு ரத்தினம் என்ற பெயரை எப்படி பாரதிதாசன் என்று வைத்துக் கொண்டாரோ அதைப் போலவே, பாரதிதாசனின் மேல் கொண்ட பற்றின் காரணமாக அவரது இயற்பெயரான சுப்புரத்தினத்தை தனது பெயராக சுப்பு ரத்தினதாசன் என்று வைத்துக் கொண்டார். பிறகு பெயரைச் சுருக்கி "சுரதா" என அமைத்துக் கொண்டார்.
- புரட்சிக் கவிஞர் பாரதிதாசனின் உதவியாள ராக இருந்தார். வீட்டிலேயே தங்கியிருந்து அவரது எழுத்துப் பணிக்கு மிகுந்த உதவியாக இருந்தவர் நம் உவமைக் கவிஞர்.
- 1942 - ஆம் ஆண்டில் சுயமரியாதை இயக்கத் தின் கருத்துக்களைப் பரப்பும் வகையில் சென்னையில் நாடகக் குழுவொன்றை அமைத்

தார்கள். முருகு சுப்பிரமணியன், பெரியண்ணன், இராம சுப்பையா, கிருஷ்ணராஜு ஆகியோர் கூடி அமைந்த இந்த நாடகக் குழுவின் பெயர் "முத்தமிழ் நிலையம்" என்பதாகும். இந்த நாடகக் குழுவினரால் பாரதிதாசனின் "புரட்சிக்கவி" நாடகம் தமிழ் நாட்டில் பல இடங்களிலும் நடத்தப்பட்டது. அதில் அமைச்சர் வேடத்தில் உவமைக்கவிஞர் நடித்தார்.

- தந்தை பெரியார், கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன், இரத்தின சாமிப்பிள்ளை ஆகியோரின் தலைமையில் நடைபெற்ற "புரட்சிக் கவி" கவிதை நாடகம் அக்காலத்தில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. இந்நாடகத்தில் அமச்சர் வேடத்தில் உவமைக் கவிஞர் நடித்து, பெரும் பாராட்டுதலைப் பெற்றார்.
- அக்காலத்தில் அரசவைக் கவிஞராக இருந்த நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளை அவர்களுடன் பல மாதங்கள் தங்கியிருந்து அவரது எழுத்துப் பணிகளுக்கு உதவியாளராக இருந்தவர் நமது உவமைக் கவிஞர்.
- அறிஞர் வ.ரா. அவர்களை முதன் முதலில் சந்தித்தபோது நீங்கள் எழுதிய கவிதை ஒன்றைப் பாடுங்கள் என்று சொல்ல, உவமைக்கவிஞரின் பாடலைக் கேட்டவுடன் வ.ரா. "மற்றொரு பாரதி பிறந்து விட்டான்"

என்று மனமாரப் பலர் முன்னிலையில் பாராட்டினார்.

- நாராயணன் என்பவரை ஆசிரியராகக் கொண்டு புதுப்போட்டையிலிருந்து வெளி வந்த "தலைவன்" இதழில் துணை ஆசிரிய ராகப் பணியாற்றிய உவமைக் கவிஞர்,, அதில் தொடர்ந்து சிறு கதைகள், கவிதைகள் எழுதி வந்தார்
- புகழ்பெற்ற கவிஞர் திருலோக சீதாராம் அவர்கள் நடத்தி வந்த "சிவாஜி" பத்திரிகையில் ஆரம்ப காலத்தில் உவமைக் கவிஞரின் கவிதைகள் தொடர்ந்து வெளிவந்தன.
- திருச்சி வானொலி நிலையத்தில் ஒளிபரப் பான உவமைக் கவிஞரின் பல நாடகங் களில் ஒன்றான "சுஜாதா" நாடகத்தை கேட்ட பல பெரியவர்கள் பாராட்டினர். கவிஞர் கு.சா. கிருஷ்ணமூர்த்தி இவரை திரையுலகத்தின ருக்கு அறிமுகப்படுத்தி திரைத்துறையில் இணைத்து வைத்தார்.
- 1944-ல் "மங்கையர்க்கரசி" என்ற திரைப்படம் தயாரானது. உவமைக் கவிஞர் முதன்முதலில் திரைப்படத்திற்கு உரையாடல் தீட்டியபடம் இதுதான். திரையுலக வரலாற்றிலேயே மிகக் குறைந்த வயதில் திரைப்படத்திற்கு உரை யாடல் எழுதியவரும் நமது உவமைக் கவிஞரே.

இந்தப்படம் வெளிவந்து மிகப்பெரும் வெற்றி பெற்றது. அக்காலத்தில் வசன உலகத்தின் சக்கரவர்த்தியாக இருந்த இளங்கோவன் அவர்கள் உவமைக் கவிஞரின் உரையாடல் திறனைப் பெரிதும் பாராட்டினார்.

- ☐ உவமைக்கவிஞரின் " மங்கையர்க்ரசி" வசனம் மிகவும் புகழ்பெறவே அதை நூல் வடிவில் கவிஞர் வெளியிட்டார். பாவேந்தர், நாமக்கல் கவிஞர் இருவரின் வாழ்த்துரையுடன் வெளி வந்த இந்த வசன நூல்தான் ஒரு திரைப் படத்தின் கதைவசனம் புத்தக வடிவில் முதன் முதலாக வந்ததாகும்.
- ☐ உவமைக்கவிஞரின் முதல் நூலை வி.ஆர்.எம். செட்டியார் ஸ்டார் பிரசுரமாக 1946-ஆம் ஆண்டு மார்ச் மாதம் வெளியிட்டார். புத்தகத்தின் பெயர் "சாவின் முத்தம்".
- ☐ 1956-ல் "பட்டத்தரசி" என்கிற சிறு காவிய நூலை உவமைக் கவிஞர் வெளியிட்டார். 16 பக்கங்கள் கொண்ட பரபரப்புக்குரிய அந்நூலின் முன்னுரைக்கவிதையை ஒரு மணிநேரத்திலேயே எழுதி முடித்து சாதனை படைத்தார்.
- ☐ 1954-ல் கலைஞர் மு. கருணாநிதி அவர்களின் "முரசொலி" இதழில் உவமைக் கவிஞர் தொடர்ந்து கவிதை எழுதி வந்தார். எழுச்சியும், வேகமும் நிறைந்த அந்தக் கவிதை

களைப் படித்துத்தான் "சுரதா பரம்பரை" என்று சொல்லிக் கொள்வதில் பெருமைப் படுகிற அளவுக்கு பெருமளவில் கவிதை ரசிகர்கள் இவருக்கு உருவாயினர்.

- 1955-ல் "காவியம்" என்கிற கவிதை வார இதழை உவமைக் கவிஞர் துவக்கினார். உலகிலேயே முதன் முதலாக கவிதையிலேயே வார இதழை நடத்தியவர் என்கிற பெருமையைப் பெற்றார்.
- காவியத்தைத் தொடர்ந்து "இலக்கியம்" (1958) " ஊர்வலம்(1963) "விண்மீன்" (1964) என்று பல இலக்கிய ஏடுகளை துவக்கி நடத்தி வந்தார் உவமைக் கவிஞர்.
- 1965-ல் உவமைக் கவிஞரின் புகழ்பெற்ற 'தேன்மழை" என்கிற கவிதை நூல் வெளிவந்தது. 1969-ல் இந்நூலுக்கு தமிழக அரசின் பரிசு கிடைத்தது.
- 1968-ல் உவமைக்கவிஞர் அவர்கள் தனது பெயரிலேயே சுரதா" என்கிற கவிதை மாதமிருமுறை இதழைத் தொடங்கினார். அதன் பிறகே கவிஞர்கள், தங்கள் பெயரில் இதழ்களைத் தொடங்கும் முறையைக் கொண்டு வந்தனர்.
- 1971-ல் "ஆனந்தவிகடன்" வார இதழில் வாரந்தோறும் உவமைக்கவிஞர் எழுதி வந்த கவிதைகள் பெரும் பரபரப்பை ஏற்படுத்தின.

ஓராண்டுக் காலத்திற்கு மேல் வாரந்தோறும் ஆனந்தவிகடனில் உவமைக் கவிஞரின் கவிதைகள் வெளிவந்தன. விகடனில் மற்றவற்றைவிட இவரது கவிதைக்கே அதிக அளவில் கடிதங்கள் வந்து குவிந்தது சிறப்புக்குறியதாகும்.

- ☐ பாவேந்தரைத் தொடர்ந்து 1966-ல் தமிழ்க் கவிஞர் பெருமன்றத்தின் தலைவராக இருந்து செயல்பட்டார். மீண்டும் இருபதாண்டுக் காலத்திற்குப் பிறகு தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு பல்வேறு நல்லதிட்டங்களை செயல் படுத்தினார்.
- ☐ 1972-ல் தமிழக அரசு உவமைக்கவிஞருக்கு "கலைமாமணி" பட்டம் வழங்கியது.
- ☐ 1978-ல் எம்.ஜி.ஆர். தலைமையிலான தமிழக அரசு முதன் முதலில் ஏற்படுத்திய "பாவேந்தர் பாரதிதாசன் விருது" (ரூ 10,000 தொகை-4 பவுன் தங்கப் பதக்கம்) உவமைக் கவிஞருக்கு வழங்கி தமிழக அரசு பெருமையடைந்தது.
- ☐ 1980-82-ல் தென்கிழக்கு ஆசிய நாடுகளான சிங்கப்பூர், மலேசியாவுக்கு இருமுறை நீண்டகாலசுற்றுப்பயணம் செய்து பல நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டார்.
- ☐ 1982-ல் உவமைக்கவிஞரின் அறுபது வயது நிறைவையொட்டி தமிழக நிதியமைச்சர் டாக்டர் நாவலர் தலைமையில் "கவிஞர் சுரதா மணிவிழா" நடைபெற்றது. இலக்கிய அன்பர்

கள் கவிஞருக்கு திரட்டிய நிதி ரூ.60,000 அந்த விழாவில் உவமைக் கவிஞருக்கு வழங்கப் பட்டது. விழாக்குழுவின் சார்பில் மணிவிழா மலரும் வெளியிடப்பட்டது.

- ☐ 1982-ல் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் மடத்தில் பாரி வள்ளல் விழாவின் போது "கவியரசர்" பட்டமும் தங்கப் பதக்கமும் உவமைக் கவிஞருக்கு வழங்கப் பட்டது.

- ☐ 1987-ல் மலேசியாவில் நடைபெற்ற 6-வது உலகத்தமிழ் மாநாட்டில் சிறப்பு விருந்தினராக அழைக்கப்பட்டு பங்குகொண்டு உரையாற்றினார். அப்போது "உலகத் தமிழ்க் கவிஞர் பேரவை" அங்கு அமைக்கப்பட்டது. உலகின் பல நாடுகளில் உள்ள தமிழ்க் கவிஞர்கள் பலரும் கூடி அதன் தலைவராக உவமைக் கவிஞரைத் தேர்ந்தெடுத்தனர்.

- ☐ 1989-ல் அரபுநாடுகளில் ஒன்றான "சார்ஜா" வுக்கு உவமைக் கவிஞர் சுற்றுப் பயணம் செய்து அங்கு பல நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டார்.

- ☐ பாவேந்தர் நூற்றாண்டான 1990-ல் டாக்டர் கலைஞர் தலைமையிலான தமிழக அரசின் சார்பாக முதன் முதலாக ஏற்படுத்தப்பட்ட கலைத் துறை வித்தகருக்கான பாரதிதாசன்

விருது" உவமைக் கவிஞருக்கு வழங்கப்பட்டது.

- ☐ 1990-ம் ஆண்டு கேரள மாநிலத்தில் "மகாகவி குமரன் ஆசான்" அவர்களின் நினைவாக ஏற்படுத்தப்பட்டுள்ள "குமரன் ஆசான் விருது" உவமைக் கவிஞருக்கு வழங்கப்பட்டது.
- ☐ இதுவரை 1000க்கும் மேற்பட்ட கவியரங்க நிகழ்ச்சிகளுக்குத் தலைமையேற்று நடத்தியிருக்கிறார். 2000 கவிஞர்கள் இவர் தலைமையில் பாடியிருக்கின்றார்.
- ☐ உலகிலேயே முதன் முதலாக கவிதை வார இதழ் தொடங்கி நடத்தியவர். இதழின் பெயர் "காவியம்".
- ☐ வீட்டுக்கு வீடு கவியரங்கம், முழுநிலாக் கவியரங்கம், படகுக் கவியரங்கம், ஆற்றுக் கவியரங்கம் விமானக் கவியரங்கம், கப்பல் கவியரங்கம் என்று கவியரங்க நிகழ்ச்சிகளை பல்வேறு நிலைகளில் நடத்தி புதுமையும், புரட்சியும் செய்து வருகிறார்.
- ☐ ஒவ்வொருவரும் தமது இல்லத்தில் தனது கருத்துக்களை அல்லது தாம் விரும்பும் மற்றவருடைய கருத்துக்களை கல்வெட்டாக அமைத்துக் கொள்ள வேண்டும் என்று வலியுறுத்தி, அதனைத் தொடர்ந்து செய்து வருகிறார்கள்.
- ☐ வீட்டுக்கு வீடு திருவள்ளுவர், பாரதிதாசன்

படத்திறப்புவிழா என்கிற திட்டத்தை அறிவித்து அதைத் தொடர்ந்து செயல் படுத்தி வருகிறார்.

- "சுரதா தனிப் பயிற்சி கல்லூரி" என்று அவரது பெயரைத் தாங்கிய கல்லூரியை டாக்டர் எச்.ஜி. செல்வராஜ் திருச்சியில் நடத்தி வருகிறார்.
- "உவமைக்கவிஞர் சுரதா மன்றம்" என்கிற அமைப்பு கள்ளக்குறிச்சியில் (தெ.ஆ. மாவட்டம்) புலவர் டாக்டர் இரா. வீரன் அவர்களால் தொடங்கப்பட்டு சிறப்பாக நடைபெற்று வருகிறது.
- இவரது கவிதை அனைத்து இந்திய மொழிகளிலும், ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்கப்பட்டு வெளிவந்திருக்கிறது.
- சென்னை, மதுரை பல்கலைக் கழகங்களிலும், கேரள பல்கலைக்கழகம், மலேசியா, சிங்கை பல்கலைக் கழகத்திலும் இவரது நூல்கள் பாட நூலாக வைக்கப்பட்டிருக்கின்றன.
- உலகமகாகவி ஷேக்ஸ்பியரின் அனைத்துப் படைப்புகளும் ஒரே புத்தக வடிவமாகி வெளி வந்திருப்பதைபோல் இவரது படைப்புகள் அனைத்தும் ஒரே புத்தகவடிவமாக உருவாகி வருகிறது.
- கம்பனின் மகன் அம்பிகாபதியைப்போல்

இவரது ஒரேமகன் கல்லாடனும் மிகச் சிறந்த கவிஞராகத் திகழ்பவர். இவரது மகன் கல்லாடன் மிகச்சிறந்த கவிஞருக்கான வி.ஜி.பி. விருது பெற்றிருக்கிறார் - சுரதாவின் பேரன் இளங்கோவன் கரூர் திரு.வி.க. மன்றத்தினரால் "தொலைக் காட்சித் தோன்றல் " விருது பெற்றிருக்கிறார்.

- "நட்சத்திர இரவு" "இசை இரவு" என்பதை போல் " சுரதா இரவு" என்று இவரது பாடலைக் கொண்ட இசைநிகழ்ச்சி சேலத்தில் நடைபெற்று பரபரப்பையும் வெற்றியையும் ஏற்படுத்தியது. அதன் பிறகே அனைவரும் அதனை பின்பற்றினர்.
- 20க்கு மேற்பட்ட கதை, கவிதை, கட்டுரை நூல்களும் 100-க்கு மேற்பட்ட திரைப் படங்களுக்கு பாடல்களும் எழுதியுள்ள உவமைக்கவிஞர் நான்கு திரைப்படத்திற்கு வசனம் தீட்டியுள்ளார்.
- 1989-ஆம் ஆண்டு இந்திய தொலைக்காட்சி தேசிய ஒளிபரப்பில் ஒவ்வொரு மொழி யிலும் சிறந்த கவிஞர்களின் வாழ்க்கை வரலாற்றை அவர்கள் பிறந்த ஊர்களுக் கும், வாழும் இடத்திற்கும் சென்று படம் பிடித்து ஒளிபரப்பினார்கள். அப்போது "தமிழ் மொழியின் சிறந்த கவிஞர்" என்ற தலைப்பில் 40 நிமிட கவிஞர் சுரதா அவர்களின் வாழ்க்கை

வரலாற்றை ஒளி பரப்பி தொலைக்காட்சி தமிழுக்கு பெருமை சேர்த்தது.

- 1993-ஆம் ஆண்டு ஈரோட்டில் அமைக்கப் பட்டுள்ள ராணா அறக்கட்டளையின் "ராணா விருது" (ரூ.10,000 தொகை கொண்டது) வழங்கப்பட்டது.

## இயற்கை

கோடைவெயில் வந்ததனால் குயில்கள் கூவும்
 கொம்பெங்கும் தளிர்தொங்கும் வண்ணம் மேவும்
ஏடுதரும் பைந்தமிழைக் கிளிகள் கற்கும்.
 இலைக்குடையைப் பிடித்தபடி மரங்கள் நிற்கும்.

* * *

ஆறெல்லாம் போர்த்துவது பூவின் போர்வை;
அழகுமலர் வழிப்பதெல்லாம் செந்தேன் வேர்வை;
சேறெல்லாம் பயிருண்ணும் கறுப்புச் சோறு.

—இதழ் : சுரதா (1-6-1968)

## இறைவன்

ஆதியில் வாழ்ந்தோர்க் கெல்லாம்
 அச்சமே இறைவ னானான்.
ஓதிய மேலோர்க் கெல்லாம்
 உண்மையே இறைவ னானான்.
பாதியில், நாட்டை யாண்ட
 பார்த்திபன் இறைவ னானான்.
மேதினி மீதில் இன்றோ
 விஞ்ஞானி இறைவ னானான்.

— நூல் : துறைமுகம்

## உலகம்

வழிநடைப் பயணம் செய்பவர்க் கெல்லாம்
வாய்மொழியே நல்ல வாகன மாகும்.
பொழிநிழல் இயற்கையின் பூப்பந்த லாகும்.
புவியே பொதுமக்கள் புத்தக மாகும்.

## பூமி

எழுத்தின் மீது நாம் இடுகின்ற புள்ளியே
ஒற்றாம்! கறையான் உண்டாக்கும் இல்லமே
புற்றாம்! பாம்புகள் புகுந்துபடுத் துறங்கும்
புற்றுக்கள் எல்லாம் பூமியின் செவிகளாம்!

## நிலம்

மணலால் வாதத மணலாம். அம்மணற்
பரப்பே நெய்தல் நிலத்திற்குப் பாயாம்.

## காலம்

கூதிர் எனுஞ்சொல் கருவைக் குறிக்கும்
உலகில் வாழும் உயிரினை மெல்லாம்
கருவடை தற்குக் காரண மாக
இப்பருவம் இருப்பதால் இதைக் கூதிர்
என்கிறோம்.

கூதிர்ப் பருவத்தில் கூதிர்க்காற் றடிக்கும்
மிதந்து செல்லும் மேகம் சூற்கொளும்
குளத்து மீனெலாம் குஞ்சு பொரிக்கும்

* * *

வெப்பங் கொடுக்கும் பருவமே வேனிலாம்
இளவேனில் முதுவேனில் இரண்டும் - செங்கதிர்க்
கோபத்தில் தோன்றும் குழந்தைக ளாகும்.

சித்திரை வைகாசி இளவேனிற் காலம்
குயில் கூவு தற்கிது மிகவுறு கூலம்
எச்சில் வண்டுகள் இப்பரு வத்தில்
விரிந்த பூக்களில் விழித்தெழுந் திருக்கும்.

* * *

ஆவணி புரட்டாசி கார்கால மாகும்.
அறுபது நாட்களே அதன்வய தாகும்.
சீர்கொண்டு விளங்கும் கார்காலந் தன்னில்
நீர்கொண்ட மேகம் ஊர்வலம் போகும்.
வந்து வந்து வாடைக்காற் றடிக்கும்.

முன்பனிக் காலம் முடிந்த பின்னர்ப்
பின்பனிக் காலம் உடனே பிறக்கும்.
இன்னல் விளைக்கும் இக்காலந் தன்னில்
உத்தர வின்றி உலவைக்காற் றடிக்கும்.

*         *         *

முற்றிய வெப்பமே முதுவேனிற் பருவமாம்.
கோடை வந்ததும் கோடைக்காற் றடிக்கும்.
ஏமாற்றும் கானல்நீர் எங்கும் தோன்றும்.
வலியனும், காடையும், வானம் பாடியும்,
மகிழ்ச்சி கொள்ளும். மல்லி மலரும்.
மாதிரி காட்டிப் பாதிரி பூக்கும்.

*         *         *

அந்தக் காலமோ செந்தமிழ் இலக்கிய
கல்வியில் ஆழம் பார்த்திட்ட காலம்.
இந்தக் காலமோ இறுகத் தழுவிக்
கலவியின் ஆழம் பார்க்கின்ற காலம்.

*         *         *

பனித்தல் என்றால் நடுங்க வைப்பதாம்
நமையெல்லாம் பனித்துளி நடுங்க வைப்பதால்
பயத்தினால் நாமதைப் பனித்துளி என்கிறோம்.
அன்னையைப் போன்று முன்னே பிறந்து
நமையெலாம் நாள்தொறும் நடுங்க வைத்திட
முந்தும் பருவமே முன்பனிக் காலம்.

## சூரியன்

அகிலம் யாவும் அழகின்வேலை - நீல
ஆகாயம் செங்கதிர் செல்லும் சாலை.

— (இசைப்பாடல்)

சூரியனோடு மிகப்பெரிய தீப்பி ழம்பு.
சுடர்வீசும் பொன்தட்டு; விண்ணின் பொட்டு!

* * *

எண்ணெய் ஊற்றாமலே எரியும் சூரியன்
கருநீல வானத்துக் காலை விளம்பரம்.

## வெப்பம்

வளர்ச்சிக்கும் கிளர்ச்சிக்கும் வெப்பம் வேண்டும்
வாழ்க்கையெனும் இயக்கத்தை நடத்து தற்கு
தளராத ஊக்கந்தான் வேண்டும். ஊக்கம்
தருவதெது?வெப்பந்தான் ...............

— இதழ் : தமிழ் நாடு (14-4-1962)

## நிலா

நல்லவர்தம் நட்பெனவே வளரும் - சில
நாளிலதன் ஈரவுடல் தளரும் - இன்பச்
சொல்லமுதப் பாவலரைத்
தூண்டிவிட்டுக் கொண்டிருக்கும்
சோதி - வான்
ஊர்தி!

ஆசைகொண்டு விண்வெளியின் மீது - மதி
ஆடையின்றி யேஉலவும் மாது - முகில்
ஓசைகொண்ட மண்டலத்தில்
ஊர்ந்துலவி வாழ்ந்துவரும்
ஊமை - வெள்ளி
ஆமை!

* * *

நோய் வராமல் இளைக்கும் வெண்ணிலா - இரவு
நேரந் தனை வெறுக்கும் வெண்ணிலா
தாய்உள்ளம் போல் குளிர்ந்த வெண்ணிலா -
வெள்ளித்
தட்டுபோல அமைந்த வெண்ணிலா.

## தென்றல்

அலைகொண்ட நீரினை ஆறுகள் விரிக்கும்!
மணிகொண்ட தோகையை மாமயில் விரிக்கும்!
வளர்தென்றல் பூக்களின் வாடையை விரிக்கும்!

## முகில்

அலைகளை அடுக்கி வைத்து
அனுப்புதல் போல, வானில்
கலையாத நடைபி ரிக்கும்
ஈரத்தின் பரப்பே!..........

## மழை

எண்ணெயில் குளித்த கூந்தல்
இழையென நீண்டு பெய்யும்
வெண்மழை நீரே! விண்ணின்
வியர்வையே வாழ்க!

* * *

வீணையின் நரம்புபோல் வீழும் மழைநீர்
தாவரங் கட்கெல்லாம் தாய்ப்பா லாகும்!

* * *

மேகத்தின் சிரிப்பை மின்னலாம்! அந்த
மேகம் வழிக்கும் வியர்வையே மழையாம்!
புல்லுக்கும் பூண்டுக்கும் மழையே புணர்ச்சிநீர்!
எள்ளுக்கும் கொள்ளுக்கும் அதுவே வளர்ச்சிநீர்!

# நீர்

உப்புநீர்க் கடலில் உருவாகும் மேகம்
துப்பும் எச்சிலே தூயவெண் மழையாம்!
வீணையின் நரம்புபோல் வீழும் மழைநீர்,
தாவரங் கட்கெல்லாம் தாய்ப்பா லாகும்!

* * *

ஏரியென் றும் ஆறென் றும் இருண்ட கடலென் றும்
குளங்குட்டை என் றும் கூறும் இவையாவும்
ஐந்து வகைப்பட்ட அழகான நீர்க்குடும்பம்!

வாலிபத்தின் அவசரந்தான் காதல் என்றான்.
வானத்தின் அறுவடைதான் மழைநீர் என்றாள்.

— இதழ் : உரிமை வேட்கை
(1974 -பொங்கல் மலர்)

கண்ணீரின் மீது செல்லும்
கப்பல்தான் கவலை. ஆற்றுத்
தண்ணீரின் மீது செல்லும்
தட்டுதான் ஓட மாகும்.

— இதழ் : உரிமை வேட்கை
(1975 - பொங்கல் மலர்)

வற்றாத மேகம் வாயைத் திறந்தால்
ஊசிபோல் மின்னல் உடனே தோன் றும்.

விம்மி விம்மி மேகங்கள் அழுதால்
நல்ல மழைநீர் நமக்கெல்லாம் கிடைக்கும்
— நூல் : சுவரும் சுண்ணாம்பும்

## நதி

பொன்னியே, என்று நீ பிறந்த தேதி - உதிரம்
போலவே உனக்கும் இல்லையே சாதி
உன்னுடல் தனைமறைக்கத் தண்ணீர்தான்
துணியோ?
உருண்டோடும் கூழாங்கல், உன்மாலையின்
மணியோ?
— (இசைப்பாடல்)

## காவிரி

மரமும் பயிரினமும் பருகிடும் பாலே - குடகு
மலைமீதிருந்து மேகம் நீட்டிய காலே!
விரிந்து புகழ் அடைந்தாய் மூவேந்தரைப் போல,
விளைவும், செல்வமும், தென்னாட்டில்
உன்னாலே.
— (இசைப்பாடல்)

## ஏர்

ஈரத்தின் வரலாறே மேக மாகும்.
ஏருழவின் வரலாறே வைய மாகும்.

— நூல் - தேன்மழை

## கடல்

விண்வெளி இவ்வை யத்தின்
விரிகுடை; புவியில் வாழும்
பெண்களின் கண்கள் இட்ட
பிச்சையே கடலின் நீலம்!

— நூல் : தேன் மழை

கள்ளுண்ட சிற்றினத்தார் நடையைப் போலே
கருங்கடலின் மீதலைகள்; சங்கத் தாரால்
தள்ளுண்ட பாடலைப்போல் நுரைகள்; வண்ண
சமுத்திரத்தின் ஓரத்தில் சிறுவெண் காக்கை.

— போபால் தமிழ்ச்சங்கம் சிறப்பு மலர்
(1966-67)

அலைவளர் கடலே ஆழம்
அலைகளே அதன்கைத் தாளம்.

— நூல் : தேன்மழை

ஆறுகள் அனைத்தையும் அலைகடல் கூப்பிடும்
உப்பை மட்டுமே ஓயாமல் சாப்பிடும்.

* * *

நெடுங்கடல் என்பது நெய்தல் நிலத்தின்
ஓரத்தைக் குறிக்கும் உப்புநீர் விளம்பரம்.

— இதழ் : 'சுரதா' (1-12-1970)

தள்ளிக்கொள் என்பதெல்லாம் மனிதன் சட்டம்!
தழுவிக்கொள் என்பதுதான் கடலின் சட்டம்!

* * *

வரையாத ஓவியமே! தடாகந் தன்னில்
வளராத தாமரையே! நிலமும் நீரும்
பிரியாத புணர்ச்சியுடன் இருப்ப தாலே
பெருங்கடலைப் புணரியென்றார் ...........

* * *

இரவல் நிறத்தை எங்கோ வாங்கி
இருண்ட கடலெனப் பெயர்பெற் றிருக்கும்
போலிக் கடலோ வேலியில் லாதது!
நிலத்தை விழுங்க நினைக்கும் நீர்நிலை!

* * *

அந்தக் காலத்து அரசன், பற்பல
மாதரைத் தழுவி மகிழ்ந்தாற் போல,
வளைந்தும் நெளிந்தும் வருகின்ற பற்பல
நதிகளைப் புணரும் தண்ணீர் நாயகன்.

* * *

கரையொடு பிறவாக் கருங்கடல், பூத்த
நரையொடு பிறந்த நதிபதி யாகும்!'

*   *   *

நீல வானத்தின் நிலைக்கண் ணாடிதான்
சுத்திக் கொண்டிருக்கும் கருங்கட லாகும்.

*   *   *

பள்ளத்தில் துள்ளு கின்ற
    பனிக்கடல் பாராய்! தீயோர்
உள்ளத்தின் இருட்டும், இந்த
    ஒலிகடல் இருட்டும் ஒன்றே!

— இதழ்: இலக்கியம்
(15-3-1961)

ஆடிக்கொண் டேயி ருக்கும்
    அழகான தொட்டில்! சுத்திப்
பாடிக்கொண் டேயி ருக்கும்
    பாடகன்! பூமிப் பெண்ணைக்
கூடிக்கொண் டேயி ருக்கும்
    கொக்கோகக் கிழவன் உப்பின்
வீடிது! மகர மீன்கள்
    விளையாடும் தண்ணீர் வீதி!

— இதழ் : இலக்கியம்
(15-3-1961)

## காடு

காடு பொருள் கொடுக்கும்
 காய்கனி ஈன்றெடுக்கும்
கூடிக் களித்திடவே - கிளியே
 குளிர்ந்த நிழல்கொடுக்கும்

— நூல் : தேன்மழை

## ரோஜாப்பூ

பல்லொடு பிறப்பது நாகப் பாம்பு
முள்ளொடு பிறப்பது முழுரோ ஜாப்பூ!
வண்டொடு தூங்கும் மலராம் அதற்குப்
புதுப்பச் சிலைகளே புடவையாம்! மற்றதன்
அடியி லிருக்கும் முட்களோ ஆணியாம்.

## தேன்

பொங்கி வழிந்திடும்தேன் -- அது
பூக்களின் வியர்வையடி

— நூல் : தேன்மழை

வெட்டாத பள்ளத்தில் படுத்துக் கொண்டே
விம்முகின்ற கருங்கடல்தான் ஆழ மாகும்.
கொட்டாவி விடுகின்ற புதிய பூவின்
குழிக்குள்ளே தூங்கும்தேன் சிறந்த தாகும்.
— இதழ் : தென்னகம் (1-6-1971)

## கனி

மதுரசக் கனியெலாம் மரத்தின் கொப்புளம்
— இதழ் : சுரதா (1-7-68)

## மீன்

கொல்லக் கொல்லக் குறையாத சேனையோ
அக்கடல் மீதெழும் அலைகளே யாகும்!
கொள்ளக் கொள்ளக் குறையாச் செல்வமோ
விரிகடல் வளர்க்கும் மீன்களே யாகும்.

## முகம்

முகத்திற்கு முகவுரை முதிரா நெற்றியே
தலைக்கு முகவுரை தாமரை முகமே
— நூல்: தேன்மழை

## கண்

சோதிநிலா உருண்டைக்கு விண்ணில் வீதி;
சோழர்களின் தலைவனுக்கு மண்ணில் வீதி;
நீதி முகம் வாழ்வீதி, நெடுந்தேர் வீதி;
நெருப்புவிழி வீரர்களை வளர்க்கும் வீதி.
— இதழ் : சுரதா (1-6-1968)

பகுதியினால் சொல்விளங்கும்; கதிரோன் எட்டிப்
பார்ப்பதனால் பகல்விளங்கும்; செந்நெல் சேர்ந்த
தொகுதியினால் வயல்விளங்கும்; புருவ வில்லின்
துணைகளினால் விழிவட்டம் விளங்கும்.
— அறிஞர் அண்ணா மலர் (1968)

பயிர்ப்பலகை என்கின்ற வயலைத் தாய்போல்
பக்குவமாய்க் காப்பாற்றும் வரப்பே! வாழும்
உயிர்ப்பலகை என்கின்ற உடலில் உள்ள
உறுப்புகளில் மிகச்சிறந்த கண்ணே....
— இதழ் : தென்னகம் (5-6-1971)

எண்களின் உதவி யாலே
எழுகின்ற கணிதம் போன்று,
கண்களின் உறவில் தோன்றிக்
கனிவதே காதல்!.........

* * *

கண்ணாலே பேசாமல் பேசு; கட்டிக்
கற்கண்டே! பூச்செண்டே! கரும்பே! என்றான்.
பெண்பறவை விழியாலே பேச லானாள்.
பேரழகன் கொக்கோகம் கற்றுக் கொண்டான்.

* * *

கண்ணாடி வாசலைப்போல் இருக்கும் கண்கள்
காதலிலே ஈடுபடும் நேரந் தன்னில்
வெண்தாழம் பூவாகும்; அன்பு காட்டும்
வேளையிலே வெள்ளிநிலா விளக்கு ஆகும்.

— இதழ்: இலட்சியவாதி
*(15-5-1958)*

எண்ணில் பிறப்பது கணக்கு! இருவர்
கண்ணிலும் நெஞ்சிலும் பிறப்பது காதல்.

* * *

கண்ணைப்போல் சிறந்ததொரு உறுப்பு இல்லை;
கண்ணைப்போல் சிறந்தகடல் உலகில் இல்லை;
கண்ணைப்போல் சிறந்ததொரு அழைப்பும் இல்லை;
கண்ணைப்போல் சுடும்நெருப்பு வாசல் இல்லை.

— இதழ்: இலட்சியவாதி, *(15-5-1958)*

## பற்கள்

நிறைந்தநாள் நிலவே! கேளாய்
நின்அங்கம் கட்டித் தங்கம்
குறுந்தொகைப் பற்கள் முத்தின்
குடும்பமே!...............

* * *

சொந்தங்கள் உறவில் தோன்றும்
தொடர்கதை யாரும். யானைத்
தந்தங்கள் பெருமை தேடித்
தருகின்ற பற்க ளாகும்.

## உதடு

அணங்கின் வாயிதழ், அடிக்கடி திறக்கும்
பதினாறு அரும்புப் பற்களின் நெருக்கம்
பவளப் பெட்டியில் வைத்தமுத் துச்சரம்
— நூல் : பட்டத்தரசி

முத்தைப்போல் இருக்கின்ற பற்கள் தம்மை
மூடிவரும் பழக்கதவே! சிவந்த வாயே!
சத்துள்ள முத்தமிழின் நுட்பந் தன்னைத்
தரணியிலே பறைசாற்று............
— இதழ்: முரசொலி (28-1-1955)

எப்போதும் உன்வாய் செவ்வாய்
　　எனக்குநீ என்றும் திங்கள்
இப்போதுன் சிரிப்பு வெள்ளி
　　இன்பந்தான் நமது பள்ளி.

— நூல்: துறைமுகம்.

## மச்சம்

இறவாத புகழே சிறந்த எச்சமாம்.
தானே தோன்றும் தழும்பே மச்சமாம்.

— நூல் : சுவரும் சுண்ணாம்பும்.

## இரத்தம்

முத்தும் பவளமும், உப்பும் சங்கும்
கடல்படு பொருளாம்; கனிந்த ரத்தமோ
உடல்படு பொருளாம்; உணவின் சாரமாம்!

* * *

ரத்தமும் சிவந்த ரத்தத் துளிகளும்
நரம்புக் குழாய்களில் ஓடும் நதிகளாம்.

* * *

ரத்தினம் கடையிலே! ரத்தம் உடம்பிலே
போருக்கும் ரத்தம்; புரட்சிக்கும் ரத்தம்
தந்தவர் என்பதே சரித்திரச் சத்தம்!

## கருப்பை

விவாகம் ஆகும் வரையிலது வெறும்பை
வெள்ளை வியர்வை விழுங்கினால் கருப்பை.

* * *

காதலர் கூடி உறவாடும்
கட்டில் அறையே கழிவறையாம்
நாதமும் விந்தும் கலக்கின்ற
நல்ல அறையே கருவறையாம்.

* * *

பெண்ணெனப் படுபவள் பேதை, பெதும்பை
அவளுடற் குள்ளே அமைந்த கருப்பை
தையற் காரன் தைக்காத சிறுபை

## பெண்

அரும்பு சடங்கானால் அப்போது மலராம்
அழகி சடங்கானால் அப்போது மங்கையாம்.

* * *

மண்மீது குவிக்கும் மணல்மேடும் சரியும்.
பருவ மங்கையர் பால்மேடும் சரியும்.

பூச்சூடிக் கொள்வதும் பொட்டிட்டுக்
கொள்வதும்
மான்போன்ற விழிகளில் மையிட்டுக் கொள்வதும்
தையலுக் குரிய தலையலங் காரம்.

* * *

இருபந்து எடுத்தாடும் இடையாள்; நல்ல
எழிலுடையாள்; அன்னத்தின் நடையாள்;
மங்கைப்
பருவத்தாள்; செண்பகப்பூ நிறத்தாள்; நான்கு
பழங்காட்டும் செம்பவளக் கொடியாள்.

* * *

ஈயாத மாந்தர்பொருள் தேய்தல் போன்ற
இடையுடையாள்; ஒய்யார நடையாள் ........

* * *

தூங்கி விழிக்கும் சூரியனின் பேரொளியை
வாங்கும் நிலாமுகத்து மங்கையரே! நங்கையரே!

* * *

நிலத்துக்குப் பெருமை நெல்லாம் —பெண்மை
நலத்துக்குப் பெருமை நாணமாம்!
— இதழ் : 'சுரதா' (1-4-1969)

கனலும் புனலும் காற்றும் புகையும்
கலந்த கலப்பே கருநிற மேகம்
பனியும் பழுத்தசெங் கனியும் பற்பல
மதுமலர்த் தொகையும் மங்கைநின் தேகம்.
— நூல்: தேன்மழை

நிலத்திற் கழகு நெல்லாம் கரும்பாம்
தடாகத்திற் கழகு தாமரைப் பூவாம்
நெஞ்சத்திற் கழகு நல்ல நினைவுகள்
மஞ்சத்திற் கழகு மாதே நீதான்.

— நூல்: தேன்மழை

வன்பால் குறிஞ்சிநிலம் —அது
வாழ்க்கைப் புணர்ச்சி நிலம்!
மென்பால் மருதநிலம் -- அதை
வெல்வதுன் மேனி நலம்!

— இதழ்: 'சுரதா' (1-5-1968)

பிறைநிலவின் மொழி பெயர்ப்பே யானைத் தந்தம்;
பெற்றோரின் மொழிபெயர்ப்பே குழந்தை யாகும்;
வறுமையதன் மொழிபெயர்ப்பே ஏழை மக்கள்;
வானத்தின் மொழிபெயர்ப்பே பெண்ணின்
பார்வை.

— நூல்: துறைமுகம்.

பருவம் என்பது காலத்தின் பக்குவம்
பெண்ணுக் கமைந்திடும் பேதைப் பருவமோ.
நிமிர்ந்து வளரும் நெற்பயிர் போன்றது.
மணமாலைக் குரிய மங்கைப் பருவமோ,
நிதானமாய்க் குனியும் நெற்கதிர் போன்றது.

— நூல்: சுவரும் சுண்ணாம்பும்

## பெண்ணுரிமை

பெண்ணுரிமை பெறவேண்டும் விதவை யான
பெண்ணுக்கு மறுவாழ்வு அளிக்க வேண்டும்.
எண்ணுரிமை எழுத்துரிமை பெற்றுப் பெண்கள்
எல்லோரும் இந்நாட்டில் கற்க வேண்டும்.

## ஆடை

விண்ணுக்கு மேலாடை மேகம்; வீர
வேலுக்கு மேலாடை பகைவர் ரத்தம்;
கண்டால்நான் விடமாட்டேன் என்று கூறும்
கயவர்க்கோ காமந்தான் ஆடை யாகும்.

*— இதழ்: தென்றல் (22-9-1962)*

மண்ணுக்கு மேலாடை நதிகள்; காதல்
மங்கைக்கு மேலாடை கணவன்; ஈரப்
புண்ணுக்கு மேலாடை வெள்ளைப் பஞ்சு;
பூக்களுக்கு மேலாடை செந்தேன் ஈக்கள்.

*— இதழ்: தென்றல் (22-9-1952)*

பனியென்பீர் 'நிலாவழிக்கும் வியர்வை' என்பேன்.
பாடையென்பீர் 'காற்கழிந்த கட்டில்' என்பேன்.
கனியென்பீர் 'விதைக்குடும்பம்' என்பேன். நீலக்
கடலென்பீர் 'மண்மகளின் ஆடை' என்பேன்.
— நூல் : தேன்மழை

## குங்குமம்

உறவுக்கு மேலும் உறவு சேர்ப்பதோ
தனிமைக்குப் பின்னர் ஏற்படும் சங்கமம்
அழகுக்கு மேலும் அழகு தருவதோ
குமரியின் நெற்றியில் குடியேறும் குங்குமம்.

## கூந்தல்

நீலநிறம் அறைந்தாடிக் கொண்டி ருக்க
நிச்சயித்த பள்ளந்தான் கடலென் றிட்டாள்
ஆலமரம் தருகின்ற விழுதே உன்றன்
அழகான கருங்கூந்தல் என்று சொன்னாள்.
— இதழ் : உரிமைவேட்கை
— (1974 - பொங்கல் மலர்)

நிறைந்தநாள் நிலவே! பூவே
நின்அங்கம் கட்டித் தங்கம்
குறுத்தொகைப் பற்கள், முத்தின்
குவியல்தான்; நெளிந்து நின்று
நிறந்தரும் கரிய கூந்தல்
நெடுந்தொகைச் செல்வ மன்றோ

— இதழ் : முக்கனி
— (1963 - பொங்கல் மலர்)

## அச்சமும் மச்சமும்

மறுவென்றால் களங்கம்; மருவென்றால் மச்சம்;
மறுவென்னும் களங்கம் மதியில் இருக்கும்.
மாந்தரின் உடம்பில் மச்சம் இருக்கும்.
அச்சம், உள்ளத்தின் அதிர்ச்சி யாகும்.
மச்சம், அழகின் அடையாள மாகும்.

— இதழ் : 'சுரதா' (1-4-1969)

## நாகரிகம்

மேகங்கள் இல்லையென்றால் மழையே இல்லை
மேலோர்கள் இல்லையென்றால் ஒழுக்க மில்லை.
நாகங்கள் இல்லையென்றால் மகுடி இல்லை.
நாகரிகம் இல்லையென்றால் பெருமை இல்லை.

## கணிகை

உதட்டு விற்பனைக் காரி; பணத்தை
உருட்டினால் உடலை ஒட்டும்சிங் காரி!

* * *

கல்வியும் ஆழம்! கடலும் ஆழம்!
கணிகையர் உள்ளமோ கடலினும் ஆழம்!

## விளக்கு

விளக்கிற்கு இருட்டை ஒழிப்பதே வேலை.
அதனடி நிழலே அதுகட்டும் சேலை.

* * *

ஏரிதான் வயலின் தாய்ப்பால்;
எரிகின்ற விளக்கே! என்னைச்
சூரியன் நீதான்! தீயின்
தொடர்கதைச் சுருக்கம் நீதான்!

* * *

வாலினால் நீர்குடித்து
வாயினால் பிள்ளை பெத்து
இருட்டை விரட்டுதடி
எங்க ஊட்டுத் திரிவிளக்கு!

## விதவை

கணவனை இழந்த பெண்ணும்
கலமற்ற கடலும் ஒன்றே!

## நாட்டின் விடுதலை

முத்தமிடும் புதுக் காதலர்க்கும் இன்று
முக்கியம் நாட்டின் விடுதலைதான் _ வீரச்
சத்தம் கொடுத்துப் புறப்படுவோம். போரில்
சாவு வரினும் சிரித்திடு வோம்!

## நாடு

ஊனாகி அந்த ஊனில்
உயிரேறி வடிவம் பெற்று
நானாகித் தமிழ னாகி
நடமாடும் என்னைத் தாங்கும்
தேனான நாடே! இன்பத்
திருக்குறள் நாடே! நீல
வானேந்தும் நாடே உன்றன்
மடியன்றோ எனக்குத் தொட்டில்

— நூல்: தேன்மழை

தாய்நாடே! உன்னை வேண்டித்
தவிட்டையும் தின்பேன்; இன்பத்
தாய்நாடே! உன்னை மீட்கத்
தணல்மீதும் நிற்பேன்; அன்புத்
தாய்நாடே! மாற்றார் நஞ்சைத்
தரினும்யான் ஏற்பேன்; வீரத்
தாய்நாடே! உன்னைக் காக்கச்
சாகவும் அஞ்ச மாட்டேன்.

— இதழ் : 'சுரதா' (15-3-1968)

குறிஞ்சியாய் முல்லை யாகிக்
குளிர்கடல் நெய்த லாகிச்
சிறந்துள என்தாய் நாடே
செந்தமிழ் தென்றல் நாடே

— இதழ் : 'சுரதா' (15-3-1968)

சரித்திரம் ஒவ்வோர் நாட்டின்
தழும்பாகும்; நாட்டை வாட்டும்
தரித்திரம் பொருளா தாரத்
தடுமாற்ற மாகும்.

— நூல் : தேன்மழை

சத்தியம் தவறாதே - தாய்
 நாட்டினை மறவாதே
தட்டிப் பறிக்காதே - தன்
 மானம் இழக்காதே
 —'சத்தியம் தவறாதே' படப்பாடல்

செந்தமிழ் நாடு சிறந்த நாடு!
இந்த நாடு இயற்கையின் வீடு!

* * *

என்னெய்யூற் றாமலே எரியும் சூரியன்
தனித்தே இயங்கும் தகுதி உடையது
இந்த உலகில் செந்தமிழ் நாடும்
தனித்தே இயங்கும் தகுதி உடையது.

* * *

அந்தியிலே தென்றல் அசைந்திடும் நாடு
அறிவொடும் கலையொடும் நிறைந்துள்ள நாடு
முந்தும் அறிவினில் மூத்தநன் னாடு
முன்வைத்த காலைப் பின்வைக்கா நாடு!
 — (இசைப்பாடல்)

சாவதெனில் உரிமைக்குச் சாவ தன்றோ
தமிழ்நாட்டின் வரலாற்று வீர மாகும்.
 — நூல் : தேன்மழை

முக்கோணத் தமிழ்நாடு முல்லைக் காடு;
    மூத்தநிலம்; இந்நாடு நெல்லின் வீடு.
— இதழ்: தமிழ்நாடு (14-1-1962)
— (பொங்கல்மலர்)

மாந்தரெலாம் உணவினிலே இன்பம் காண்பர்
    மாகவிஞன் இன்பத்தில் உணவு காண்பான்
தீந்தமிழ்போல் பிறமொழிகள் இனிப்ப தில்லை.
    திருத்தங்கள் இல்லாத நாடே இல்லை.
— இதழ்: 'தமிழ்நாடு' (14-1-1965)

வாய்க்காலின் தண்ணீரைத் தொட்டுத் தூங்கும்
    வயல்தனிலே ஏருழுவின் செய்தி யுண்டு.
தாய்பாலில் குடும்பத்தின் கதையும், நாட்டின்
    சரித்திரமும் சந்தித்துக் கொண்டி ருக்கும்.
— நூல்: தேன்மழை

## வரம்பு

அலைவரம்பு மீறிவிடின்
    நெய்தல்நிலப் பகுதியெலாம் அழிந்து போகும்.
கலைவரம்பு மீறிவிடின்
    சமுதாயச் சிந்தனைகள் கருகிப் போகும்.

## நம்பிக்கைமோசம்

காட்டின் சிறுநெருப்பு
    காந்தள் மலர்ச்சிரிப்பாம்
நாட்டின் பெருநெருப்பு --கிளியே
    நம்பிக்கை மோசமடீ

— நூல்: தேன்மழை

## வஞ்சகம்

வழிமறித்தும் கொள்ளியிட்டும் களவு செய்தும்
வஞ்சித்தும் பிறர்பொருளைப் பெறலா மேனும்
பழிகுறிக்கும் செயல்செய்து சேர்க்கும் செல்வம்
பழிவாங்கும்; அதுவரையில் அதுவா தூங்கும்?

— (13-4-1968-ல் சென்னை வானொலியில்
'இன்னாசெய்யாமை' என்ற தலைப்பில்
பாடிய கவிதை)

மெல்லிய பூவினில் தேன் துளி தூங்கும்.
    வெய்யிலில் அல்லிப்பூ தூங்கும்.
வில்லின் நடுவில் அம்புகள் தூங்கும்.
    வேடத்தில் வஞ்சகம் தூங்கும்.

* * *

நெருக்கடிகள் வரும்போதும், கொடிய துன்ப
நிகழ்ச்சிகளால் தாக்குற்றுக் கலங்கும் போதும்
சிரிப்பதற்கு முயன்றாலும் முடிவ தில்லை.
சிலர்சிரிப்பில் வஞ்சகமே நுழைவ தில்லை.
— நூல் : துறைமுகம்

மயில்தூங்க வேங்கைமரம் இடங்கொ டுக்கும்;
மதயானை தன்காலால் தினையி டிக்கும்;
வயல்நீரை வரப்பெல்லாம் அளக்கும்; நாட்டின்
வளத்தையெலாம் குறிஞ்சிநிலம் விளக்கும்...
— இதழ் 'சுரதா' (1-12-1969)

## பகை

நெருப்பின் அழுக்கே புகையாகும்
நினைவின் அழுக்கே பகையாகும்.

## சாட்சி

கண்ணும் பொருளும் கலப்பதே காட்சி!
காட்சிதான் உலகில் பொய்சொல்லச் சாட்சி!

## ஊர்

உண்மையிலே, ஓர்ஊர்க்கு அழகு; அவ்வூர்
உல்லாசப் பூங்காவா? வீடா? அல்ல!
பாண்பாட்டில், ஒழுக்கத்தில், சிறந்த சான்றோர்
சிலபேரை அவ்வூர்பெற் றிருத்தல் ஆகும்!

## தமிழன்

தமிழர் உடலின் நிறமோ மாநிறம்
மாநிறம் என்பது கறுப்பின் இளமை!
— இதழ் : இலக்கியம் (20-5-58)

எந்தப் பொருளையும் நன்கு ஆய்ந்து
தொகுத்து, வகுத்து முறைமைப் படுத்தி,
வெளியிடும் பண்பில் மிகவும் சிறந்தவர்
தரணி போற்றும் தமிழர் ஆவார்!
— இதழ் : காவியம் (9-3-56)

இன்றுள்ள தமிழரெல்லாம் அந்த நாளில்
இருந்தவர்போல் தலநிமிர்ந்து வாழ வேண்டும்.
என்றென்றும் செந்தமிழைக் காத்தல் வேண்டும்.
ஏமாற்றும் மனப்பான்மை மறைதல் வேண்டும்.
— நூல் : தேன்மழை

தளர்ந்துள்ளோம்; தாழ்ந்துள்ளோம்; சங்க காலத்
தமிழ்வாழ்வை மறந்துள்ளோம்; இதனை நாட்டில்
விளங்குகின்றோம்; எழுதுகின்றோம்; பேசு
கின்றோம்;
வேண்டுமென்று நம்மவனே எதிர்க்கின் றானே!
— நூல்; : பட்டத்தரசி

மானத்தைக் கவரிமான் போலக் காத்து
வருகின்ற தனிக்கூட்டம் தமிழர் கூட்டம்.
தேனற்றுப் போய்விடினும் தமிழைக் கொண்டு
தித்திப்பு விருந்துவைப்போன் தமிழன் ஆவான்.

## மொழி

"வானமுதம் எது?" என்று கேட்டான் 'மேகம்
வடிக்கின்ற ஈரமழை" என்று ரைத்தேன்.
'தேனைவிட முத்தந்தான் இனிக்கும்" என்றான்.
"செந்தமிழ்க்கே இனிப்பதிகம்" என்று ரைத்தேன்.
— இதழ் : தமிழ்நாடு (14-4-1962)

கல்வி இல்லாதவன் செத்த மரக்கட்டை தோழா
-உண்டு
கக்கிடும் சோற்றினைக் காட்டிலும் தாழ்ந்தவன்
தோழி

கற்கண்டு தேனும் கசப்பாகிவிட்டது தோழ -இளங்
கன்னித் தமிழிசை கேட்டதின் மாறுதல் தோழி.
— இதழ் : மாலைமணி (12-6-1953)

மொழிக்காக நாட்டுக்காக
முன்னோர்போல் தொண்டு செய்வோன்
விழிக்கொரு விழியைப் போன்றோன்
விதைக்கொரு விதையைப் போன்றோன்.

* * *

என்மொழி தமிழே அந்த
எழில்மொழி தேனின் தேக்கம்
என்மொழி தமிழே அந்த
எழில்மொழி எனக்குத் தாய்ப்பால்
— நூல் : தேன்மழை

என்மனம் என்றன் எண்ணம்
என்செயல் தமிழே என்பேன்
என்குரல் என்றன் பாடல்
என்சுவை அதுவே என்பேன்
— நூல் : தேன்மழை

சீரறிந்த நீதிகளில் நெஞ்சம் வைப்பேன்
சித்திரத்தில் அன்றாடம் விழிகள் வைப்பேன்
பாரறிந்த பைந்தமிழ் அழிக்க வேண்டிப்
படைவந்தே எதிர்த்தாலும் அஞ்ச மாட்டேன்.
— நூல் : தேன்மழை

நீச்சலடித் திடுதற்கே அச்சங் கொள்வோர்,
நீர்க்கடலி லாமுத்து எடுப்பர்? ஆட்டின்
மேய்ச்சலைப்போல் நுனிக்கல்விப் பயிற்சி
பெற்றோர்
முத்தமிழை உணர்வாரோ? உணரார்!.......

*     *     *

வயிரத்தின் கிழிசலடி உதடு என்றேன்.
வளர்கின்ற செந்தமிழை வாழ்த்த என்றாள்.

*     *     *

மூதறிஞர் முதுமொழிகள்
முத்திரைப் பொன்னாகும்;
மொழியுணர்ச்சி ஓரினத்தின்
முதலுணர்ச்சி யாகும்.

*     *     *

வாய்மொழி வளர்ந்தால் தாய்மொழி வளரும்.
தாய்மொழி தேய்ந்தால் தன்மானம் தேயும்.
— நூல் : தேன்மழை

தலைகால்கை இவற்றையெலாம் காத்தோர்
செத்தார்
தமிழ்காத்தோர் வரலாற்றில் செத்த தில்லை.
— நூல் : தேன்மழை

## நீதி

நெய்படும் சோற்றில், நஞ்சின்
நிழல்படு மாயின், சாவின்
கைபடும்! அதுபோல் நீதி
கறைபடின், உண்மை சாகும்!

— இதழ் : 'சுரதா' (15-3-68)

தூங்காத புலமை பெற்றோர்
சொல்லிடும் நீதி, என்றும்
ஏங்காம லிருக்கும்! வாழ்வில்
இளைத்துப்போ காதி ருக்கும்.

## உரிமை

அந்தந்த நாட்டினைச் சொந்தக் குடிமக்கள்
ஆளுவ தன்றோ அரசுரிமை —இங்கு
வந்து இறங்கிய அந்நியர்க் கிந்திய
மண்ணில் உரிமைகள் என்ன உண்டு?

## சாதிமதம்

மதமெல்லாம் பகுத்தறிவு வளர்ந்தால் ஓடும்
மதிபொங்கப் பொங்கவெறி மதங்கள் மங்கும்!
— நூல் : தேன்மழை

கிளர்ச்சி இல்லாவிடில் வளர்ச்சி பிறக்காது
--புதுமைக்
கருத்து இல்லாக்கவிதை அதிகநாள் இருக்காது!
மொழி உணர்வில்லாமல் இனஉணர்வே வராது
--சாதி
மதம் வளர்க்கும் நாடு முன்னேற்றமே தராது.
— இதழ் : 'மாலைமணி'

நிறத்தாலே பிறப்பாலே சிறந்தோர் என்று
நினைப்பவரெல் லாங்கடையர் மடையர்...

* * *

நன்மைக்கு, நம்செயலைப் பிறந்த நாட்டின்
நலம்வேண்டி நம்மூச்சைத் தருதல் வேண்டும்.
குன்றைப்போல் தடைசெய்யும், சாதி பேதக்
கொடுமையிலாச் சமுதாயம் அமைத்தல்
வேண்டும்.

* * *

சாதியும் மதமும் சாத்தி ரங்களும்
ஏழையணக் காரன் என்கின்ற பேதமும்
பழைய உலகின் படைப்பட் டாளம்!

* * *

காதலிலே கட்டுண்டால்; பொன்னில் செம்பு
கலந்தாற்போல் கலப்புமணம் பெருகி வந்தால்
சாதியெலாம் சூடுண்ட இரும்பில் பட்ட
தண்ணீரின் துளிபோல மறைந்து போகும்.

## சோசலிசம் கேப்டலிசம் சமரசம்

சூரியன் ஒளியும் மழையும் காற்றும்
தெய்வம் தந்த சோசலிசம் --நாட்டைச்
சுரண்டும் கூட்டந்தான் கேப்டலிசம்--ஏழை
துடித்தெழுந்தால் வரும் சமரசம்.

— ('சத்தியம் தவறாதே' படப்பாடல்

## பண்பாடு

பண்படுதல் பண்பாடாம். மிகச் சிறந்த
பண்பாடு வளர்ந்தோங்க வேண்டு மாயின்
புண்படுத்தும் செயல்புரியா திருத்தல் வேண்டும்.
புகழ்வளர்க்கும் சிறந்தசெயல் புரிதல் வேண்டு

## திருவிழாக்கள்

அங்கங்கே இருப்பவரை ஒன்று சேர்க்கும்
ஆயுதந்தான் தித்திக்கும் திருவி ழாக்கள்!

## பொங்கல்

தக்கவர் எழுத்தும் பேச்சும்
தாய்மொழிப் பொங்க லாகும்
மக்களின் உழைப்பில் தோன்றும்
மனைவிழா உணவுப் பொங்கல்.

— இதழ்: சுதேசமித்திரன் (1.
— நூல் : தேன்ப

## ஒற்றுமை

உண்மையும் அன்பும்
ஒற்றுமை யானால்
செந்தணல் கூடச்
சந்தனமாகும்.

— 'மூடுபனி' நாடகப் பா

நீதியே முடிவில் வெல்லும்
நிச்சயமாய் நம்பு --நாட்டுக்
கொற்றுமையே தெம்பு --கெட்ட
நினைவு கொண்டு தாக்கும் பகைவர்
நெருப்பில் வீழும் கொம்பு!

* * *

மறுத்துக்கொண் டிருப்பதுவே திறமை யன்று!
மனங்கலந்தால் குற்றங்கள் குறையும். நாடு
சிறப்புற்றுச் செழித்தோங்க வேண்டு மாயின்
தேசிய ஒருமைப்பாட் டுணர்ச்சி வேண்டும்.

* * *

காய்ந்தமனம் கொண்டோரே, சமுதா யத்தில்
கண்டபடி வேற்றுமையை விளைவிக் கின்றார்.
சாந்தகுணம், பெருந்தன்மை குறையும் நாட்டில்
சமுதாய ஒற்றுமையும் குறைந்து போகும்.

## கூட்டுறவு

கோடை மாறினால் குளிர்ச்சி தரும்
கூட்டுறவு விருந்தால் வளர்ச்சி வரும்.

## வரலாறு

இறப்பதுவும் பிறப்பதுவும் வையந் தன்னில்
எல்லோர்க்கும் பொதுநிகழ்ச்சி; மனிதன் வாழ்வில்
திறமைகள்தான் உண்மைவர லாறு ஆகும்.

## தொழில்வளம்

நெல்தரும் வயலில் சென்று
நெடுநேரம் உழைக்கும் நாமோ,
செல்வத்தைப் பெருக்கு கின்ற
தொழில்பல செய்தல் வேண்டும்.

* * *

இல்வளம் சுகத்தைக் காக்கும்
இசைவளம் பாட்டைக் காக்கும்
சொல்வளம் மொழியைக் காக்கும்
தொழில்வளம் நாட்டைக் காக்கும்

* * *

பைந்தமிழ்ச் சொல்லின் விளக்கம் - தமிழ்ப்
பண்ணியல்; மண்ணியல் நுட்பம்
யந்திர வித்தை விளக்கம் --இவை
யாவும் நமக்கிங்கு வேண்டும்.

*

தோள்வளர்ச்சி ஆடவர்க்கும்; ஒவ்வோர் நாளும்
தொழில்வளர்ச்சி நாட்டுக்கும் தேவை யாகும்.
ஆள்வளர்ச்சி அடைவதனால் ஆவ தென்ன?
அவ்வளர்ச்சி வெறுஞ்சதையின் வளர்ச்சி தானே!
-- நூல் : துறைமுகம்.

தறியியல் ஆடைகள் தந்திடும்; இலக்கணத்
துறையியல், செய்யுளைத் தூக்கி வளர்த்திடும்!
பொறியியல், கட்டடப் புதுமை வளர்த்திடும்.

## அறிவியல்

தாய்மொழிப் பற்றை யெல்லாம்
தாய்ப்பாலோ டூட்ட வேண்டும்.
ஆய்ந்து நாம் கற்க வேண்டும்.
அறிவியல் வளர்க்க வேண்டும்.

## வானொலி

நம்கை வானொலிப் பெட்டி - விஞ்
ஞானத்தின் சிறுபூனைக் குட்டி!
தும்மினால் அதுவும் தும்மும்--ஒலி
தூங்கினால் அதுவும் தூங்கும்.

## நெசவாளி

காலத்தால் முந்தியவன் கவிஞன். அந்தக்
கவிஞனையும் முந்தியவன் ஆடை நெய்வோன்.
ஓலைதனில் எழுதாமல் அன்னோன் நெய்யும்
உடையதனில் வண்ணப்பாட் டெழுதும் சிங்கம்.

## கிரிக்கெட்

முதுமையிலே வரப்போகும்
கைகாலின் ஆட்டத்தை
முதலில் இங்கே,
புதுவிதமாய் காட்டுகின்ற
ஆட்டந்தான் கிரிக்கெட்டு
புரிந்து கொள்வீர்!

## படத்துறை

சினிமா உலகம் தேன்கூடம் போன்றது
அந்த உலகமோ அழகு உலகம்!
துடிக்கும் இளமையைத் தூண்டி விட்டும்,
அடிக்கடி இனிக்கும் ஆசையை எழுப்பும்
படஉல கம்ஓர் பல்கலைக் கழகம்!

படித்துறை இறங்கி ஏறும்
படித்துறை போன்ற தாரும்.

## கதை

கதையெலாம் வார்த்தை வெடிப்புகள், கட்டுக்
கதைகளோ கற்பனை கலந்த துடிப்புகள்.

• • •

நாட்டில் நடை பெறும்நிகழ்ச்சி ஒவ்வொன்றும்
சிறுகதையாம்; நல்லோர் செய்த
பாட்டுநடை தேனமுதாம்! உரைநடையே
பொதுமக்கள் பசிக்குத் சோறாம்.

— நூல் : துறைமுகம்
— இதழ் : சுரதா (1-3-68)

காரணம் இன்றிக் கதைகளும், கதைகளின்
தோரணம் இன்றித் தொடர்ச்சியும் இல்லை.
கதையெல்லாம் வார்த்தை வெடிப்புகள், கட்டுக்
கதையெல்லாம் கற்பனை கலந்த துடிப்புகள்!

— இதழ் : 'சுரதா' (1-12--1970)

## உரைநடை

நாட்டிய்நடை பெறும்நிகழ்ச்சி
ஒவ்வொன்றும் சிறுகதையாம்; நல்லோர் செய்த

பாட்டுநடை தேனமுதாம்
உரைநடையே பொதுமக்கள் பசிக்குச் சோறாம்!

## எழுத்தாளன்

நல்ல எழுத்தாளன் வெல்லம் போன்றவன்
அன்னவன் எழுத்து ஆணிவேர் போன்றது.

## நூல்கள்

காவியத்தால் நாட்டுக்கு நன்மை செய்யக்
கருதிடுவோர், ஈசலைப்போல், அற்ப நாளில்
ஆவியற்றுப் போகின்ற நூற்கள் நூறு
அளிப்பதனாற் பயனில்லை! பெருமை இல்லை

* * *

பூவுலகோர் சிந்தித்து மதிக்கத் தக்க
புதுஎண்ணம் வாடாத திறமை சேர்த்துச்
சாவதற்குள் குறையில்லாப் பெருநூல் ஒன்று
தந்திட்டால் புகழ்நிலைக்க அதுவே போதும்.

* * *

ஆதி இலக்கிய நூல்கள் - அவை
ஆழ்கடல் நீந்தும் கலன்கள்;
நீதி இலக்கிய நூல்கள் --அவை
நேர்வழி காட்டிடும் கைகள்.

— நூல் : துறைமுகம்

## நாட்டியம்

நாட்டியம், பேசாப் பேச்சாம்!
நமதுதாய்த் தமிழின் மூச்சாம்!
நாட்டியக் கலையே. கண்ணை
நாக்காக மாற்றும் வித்தை!

— இதழ் : சுரதா (1-12-1969)

## கலை

இலையார்வம் ஆடு கட்கும்
 எழுத்தார்வம் கவிஞர் கட்கும்
விலையார்வம் வணிகர் கட்கும்
 வினையார்வம் சிலர்க்கும், செந்தீ
உலையார்வம் கொல்லர் கட்கும்
 உண்டாதல் இயற்கை! வாழ்வில்
கலையார்வம் எல்லோ ருக்கும்
 கனிவது கடின மாகும்.

— இதழ் : சுரதா (15-8-1969)

அலைவரம்பு மீறிவிடின் நெய்தல்நிலப்
 பகுதியெலாம் அழிந்து போகும்
கலைவரம்பு மீறிவிடின் சமுதாயச்
 சிந்தனைகள் கருகிப் போகும்.

— இதழ் : சுரதா (1-3-68)

படிப்பதும் கலைதான்; செய்யுள்
    படைப்பதும் கலைதான்; பூவைத்
தொடுப்பதும் கலைதான்; பெண்ணைத்
    தொடுவதும்கலைதான்........

*   *   *

விற்பனை அதிக ரித்தால்
    விளைபொருள் அதிகம் தோன்றும்
கற்பனை அதிக ரித்தால்
    கலையல் நாட்டில் தோன்றும்

*   *   *

நினைவில் அழகும்; அழகில் போதையும்
போதை ஏற்படின் புதுப்புது ஆசையும்
ஆசையால் உறவும் அதனால் கலப்பும்
உயிரின் பிரசவம் உற்பத்தி யாகும்.
கலப்பால், குடும்பக் கலையும் வளரும்.

— 'குடும்பக்கலை' ஆண்டுமலர்

மத்தளம் சத்தம் செய்ய,
    மகரயாழ் ஏங்க, வண்ணச்
சித்திரா பதியாள் பெற்ற
    தேன்மகள் அரங்கந் தன்னில்
தத்தித்தா தைதை என்றே
    சதிராடி னாளே அந்த
முத்திரை நடன மெல்லாம்
    முழுமுதற் கலைதா னன்றோ?

*   *   *

அற்புதக் கலைகள் நாட்டுக்
 கவசியம்! கலையு ணர்ச்சி
பெற்றவர் உளத்தைத் துன்பம்
 பெரும்பா லும் சுடுவ தில்லை.

* * *

மலைநிலம் தன்னில் மேயும்
 மான்களின் ஓட்டம். பொங்கும்
அலைகடல் ஆட்ட மெல்லாம்
 அற்புதக் கலைக ளாகும்.

* * *

இயற்கையின் துணையைக் கொண்டும்
 எண்ணத்தின் உதவி கொண்டும்
செயப்படும் பொருள்கள் யாவும்
 சிறப்புறு கலைக ளாகும்.

## பாடல்

திருத்தாமல் திருந்தாமல் மாற்ற மில்லை;
 திருத்துங்கள் தீட்டுங்கள், விளாங்காப் பாடல்
செரிக்காத சோறாகும். மனித னுக்கே
 தேவையற்ற சாதிமதம் போன்ற தாகும்.

— இதழ் : தமிழ்நாடு (14-1-1965)

விதைமுயற்சி மரமாகிப் பூத்துக் காய்த்து
விளங்குதல்போல் விளங்குவதே சிறந்த செய்யுள்

மதிமுயற்சி உடையோரே இலக்கி யத்தில்
மறுமலர்ச்சி உண்டாக்கிக் காட்டக் கூடும்.

— இதழ் : 'சுரதா' (15-5-1968)

உயத்தைப் படுக்கவைத்தால் நீட்ட மாகும்
உள்ளத்தைப் பழுக்கவைத்தால் புதுமை
தோன்றும்
துயரத்தின் உச்சியிலே கண்ணீர் தங்கும்
சொற்களுக்கு வாழ்வளித்தால் கவிதை பொங்கும்.

* * *

ஒத்தமனம் கொண்டுவிட்டால் காதல் அங்கே
ஊற்றெடுக்கும்; நினைவெல்லாம் இனிக்கும்.
கல்விச்
சத்துடையோர் தொடுக்கின்ற பாடல் நன்கு
சாதிக்கும்! தலைமைக்கும் தலைமை தாங்கும்.

— இதழ் : 'சுரதா' (15-4-1968)

காவியத்தால் புலனின்பம் பெருகும்; கல்வி
கனவுவரும்; விழிவீடு வெளிச்ச மாகும்!
பாவியெத்தோன் என்றாலும், அவனைப் பற்றிப்
பாடிவிட்டால் இலக்கியத்தில் நிலைத்து
நிற்பான்!

— இதழ் :'சுரதா' (1-5-1968)

— ('தமிழே என் உயிர்' என்னும் நூலுக்கு
வழங்கிய அணிந்துரை)

அப்பத்தைச் சுடும்போது பொத்தல் வந்தே
அதன்நடுவில் தானாக அமைதல் போலே
ஒப்பற்ற காவியத்தில் எங்கி ருந்தோ
ஓடிவந்து கருத்துக்கள் குதிப்ப தில்லை.

* * *

அடையாளம் காட்டுகின்ற யாப்பின் மூலம்
அமைகின்ற வடிவந்தான் செய்யு ளாகும்.

* * *

பயிற்சிமிக்க கவிஞர்களின் சிறந்த பாடல்
பசிதீர்க்கும் மேன்மேலும் அறிவுண் டாக்கும்.

* * *

ஒற்றை நிலாவெளிச்சம் --பல
ஊருக்கும் நாட்டுக்கும் ஓசை உலகுக்கும்
முற்றும் பயன்படல்போல் --மொழி
மூதறிவாளரின் பாடல் பயன்படும்.

* * *

நாட்டுக்கு மருத்துவம் நல்ல கொள்கையாம்
பாட்டுக்கு மருத்துவம் யாப்புநூற் பயிற்சியாம்

* * *

பக்குவத்தைப் பழுத்தபழம் காட்டும்; நல்ல
பாடல்களை அப்பாடல் கருத்து காட்டும்.

– இதழ் : சுரதா *(15-4-68)*

## கவியரங்கம்

கற்போர்க்குக் கவியரங்கம் செந்தேன் கேணி
கல்லார்க்கே கவியரங்கம் குத்தும் ஆணி.

## உவமை

கவிதையில் கருத்து வேண்டும்,
கட்டாயம் உவமை வேண்டும்.
உவமைதான் கவிதை கட்கு
உயிர்நாடி; பெருமை சேர்க்கும்

* * *

உவமையில் லாத பாடல்
உப்புசே ராத பண்டம்!
அவிழ்ந்திடா தாம ரைப்பூ!
அழகுஇல் லாத மங்கை!

* * *

ஒப்பிட்டுச் சொல்வதற்கு திறமை வேண்டும்.
உழைத்தோர்க்கே அத்திறமை வந்து வாய்க்கும்.
உப்பற்ற உணவுக்கும் தாய்ப்பால் போன்ற
உவமையில்லாப் பாடலுக்கும் பெருமை இல்லை.

— இதழ்: 'தமிழ்நாடு' (14-1-1965)

## கல்வி

கற்பு புகழ்தரும், காதல் சுகந்தரும்
கல்வியால் அறிவு நயப்படும் --வெட்டும்
கத்திக்குக் கத்தித்தான் பயப்படும்.

*   *   *

கருவில் இருக்கும்போது
சாதி மதம் ஏது?
கல்வியைப் போல் உலகில்
அழியாத பொருள் ஏது?

— இதழ் : ஊர்வலம் (15-5-63)

தாமரைப் பூவில் மதுவதிகம்
தனித்தமிழ்ச் சொல்லில் சுவையதிகம்
பாமரர் நெஞ்சில் இருளதிகம்
படித்தவர் நெஞ்சில் தெளிவதிகம்

— நூல் ; தேன்மழை

## வீரம்

வெளிச்சத்தின் மரணத்தை இருளென் பார்கள்
வீரத்தின் விளைவுகளை மறமென் பார்கள்.

## உழைப்பு

உண்மை உணர்ந்தவர்க்கு வேற்றுமை இல்லை.
உயர்ந்தவர் தாழ்ந்தவர் பிறவியில் இல்லை.
விதைக்காத வயல்தனில் அறுவடை இல்லை.
உழைக்காதவன் வாழ்வில் முன்னேற்றம் இல்லை.

— (இசைப்பாடல்)

கடலே முகிலுக் கலுவலகம்
கண்ணே கனவுக் கலுவலகம்
உடலே உயிருக் கலுவலகம்
உழைப்பே வாழ்வுக் கலுவலகம்

* * *

உழைப்பே இன்றி உலகில் வாழ்பவன்
கரும்பில் தோன்றும் வெறும்பூப் போன்றவன்.

* * *

கற்பனை பெருக வேண்டின்
கல்வியைப் பெருக்க வேண்டும்.
வெற்றியைப் பெருக்க வேண்டின்
மேன்மேலும் முயல வேண்டும்.

— நூல் : தேன்மழை

விதவைக்கு மீண்டும் விவாகம் செய்யலாமா
தோழா-உயிர்
விதையை முளைக்க விடுவதே நல்லது தோழி.

வாழ்வில்முன் னேற்றம் உழைக்காமல் வராது
தோழா - தானாய்
உப்புக்கடல் முத்து எப்படிக் கரையேறும் தோழி.
— நூல் : தொடாத வாலிபம்

இழைத்தால்தான் நூல்கிடைக்கும் என்பதாலே
இழைக்கின்றோம் பஞ்சுதனை; எந்த நாடும்
உழைத்தால்தான் முன்னேற முடியு மன்றி
உபதேசச் தால்தேசம் உயர்வ தில்லை.
— நூல் : துறைமுகம்

இழைப்பினால் பஞ்சும்; கற்றோர்
எழுத்தினால் பாட்டும்; தீயின்
விழிப்பினால் அடுப்பும்; மீட்டும்
வீணையால் இசையும்; மண்ணின்
செழிப்பினால் நெல்லும். புல்லும்
சிறந்திடும் தன்மை போல,
உழைப்பினால் உயரக் கூடும்.
உயர்ந்தோரை உலகம் நாடும்.
— இதழ் : சுரதா (15-5-1969)

## வியர்வை

*வியப்போ! புதிய உணர்ச்சியின் விளக்கம்!*
*வியர்வையோ! உடல்தரும் உப்புநீர் விளம்பரம்!*

## ஊக்கம்

ஊக்கத்தை நெஞ்சில் வைத்தும்,
உழைப்பினை வாழ்வில் வைத்தும்,
தூக்கத்தை விரட்டு வோர்க்குத்
தோல்வியே வருவ தில்லை!

## தகுதி

தகுதி மிக்கோர் தருகின்ற பட்டம்
பகுதி போன்று நிலைத்து நிற்கும்

— நூல் : தேன்மழை

குலைக்கனம் கொண்ட தென்னங்
குரும்பையைப் போன்றோர்க் கெல்லாம்
தலைக்கனம் வருமே யன்றித்
தகுதிகள் வருவ தில்லை!

— இதழ் : *சுரதா (15-4-1968)*

## மதி நுட்பம்

கற்றோரை யார்வெல்லக் கூடு மென்றால்
கவிஞன்தான்! அரசாளும் முறையில் இங்கே

மற்றாரை யார்மிஞ்சக் கூடு மென்றால்
    மதிநுட்பம்மிக்கோன்தான்.....
    — (4-3-1973-ல் பண்ணுருட்டி பாராட்டுவிழாவில்)

## புதுமை

தானியங்கள் முளைக்காமல் போவ தில்லை!
தனித்திறமைப் புதுமைகளும் சாவ தில்லை!

*   *   *

புதுமைதான் புகழின் கோடு;
    புதுமைதான் வளரும் வாழ்க்கை;
புதுமைதான் உணர்வைத் தூண்டும்;
    புதுமைதான் பாட்டில் வேண்டும்.

*   *   *

புதுமையே அறிவின் ஆக்கம்
    புதுமையே புகழுண் டாக்கும்
புதுமையே தலைமை தாங்கும்
    புதுமையே நிலைத்து நிற்கும்

— நூல் ; தேன்மழை

## செயல்

ஒருசிலர் எல்லாம் செய்வர்
    செய்வதை ஒழுங்காய்ச் செய்யார்

ஒருசிலர் ஒன்றே செய்வர்
செய்யினும் ஒழுங்காய்ச் செய்வர்
— நூல் : தேன்மழை

உண்மைகள் நன்மைக்கு வழிகாட்டும்
உயர்ந்தோர் என்பதைச் செயல்காட்டும்.

## புகழ்

பொன்னும் பெண்ணும் அழகின் அவதாரம்
புகழ்தான் சிறந்த அறிவின் அலங்காரம்.
செல்வாக்கு நாலைந்து சிற்றூரைத் தாண்டும்
நல்ல புகழே நாட்டினைத் தாண்டும்

* * *

திறந்து கிடக்கும் திசைகளின் வாயிலைக்
கீறிச் செல்வது கீர்த்தியாம். சாவையும்
மீறி வாழ்வது மேலான புகழாம்.

* * *

நெருங்கியவர வேண்டுமெனில் நல்லுறவு
வேண்டும்.
நீண்டுவர வேண்டுமெனில் ஓங்குபுகழ் வேண்டும்.

* * *

மிகுதியெலாம் நீரானால், கடலாய்த் தோன்றும்;
மிச்சமெல்லாம் அறிவானால், புகழாய்த்
தோன்றும்.

கருங்கடல் மீது கலத்தைச் செலுத்துவோர்
கலவர். அதாவது கப்ப லோட்டிகள்
எண்ணத்தில் புதுமையை இழுத்துக் கட்டுவோர்
புலவர். அதாவது புகழுக் குரியவர்

* * *

பூவின் வியர்வையே தேனாம் --தினம்
போரிடும் உன்விழி மீனாம்!
பூவையே! பொய்புகழ் சாகும்--மலை
பூமியின் கொப்புள மாகும்!

— இதழ்: சுரதா (15-7-1968)

கல்லைவைத்தும் கருங்கடலின் நீரை வைத்தும்
கற்றறிந்தார் தமிழ்நாட்டுக் கெல்லை வைத்தார்.
சொல்லைவைத்தும் சொல்குறிக்கும் பொருளை வைத்தும்
தொல்புலவர் பொய்யாத புகழை வைத்தார்

— நூல்:தேன்மழை

ஒளியென்றால் வாழ்ந்துவரும் காலந் தன்னில்
உண்டாகும் செல்வாக்கை குறிக்கும். மேலும்,
தெளிவாகச் சொல்வதெனில் புகழ்மட் டுந்தான்
சிரஞ்சீவியாயிருக்கும்!......

— இதழ் : தென்னகம் (3-6-1971)

பெருமையில்லாப் பாட்டெழுது மாட்டேன்
என்னைப்
பின்பற்றி எழுதுதற்கோர் கூட்ட முண்டு.
கருவடைந்த பெண்பெறுவாள் குழந்தை; என்றன்
கருவிதைகளும் என்புகழ்க்குத் தாயாய் நிற்கும்.
— நூல் : தேன்மழை

இன்பம் என்பதும் நம்பிக்கை
துன்பம் என்பதும் நம்பிக்கை
ஆராய்ந்து பார்த்தால் பெரும்புகழும்
ஆபத்தைக் குறிக்கும் எச்சரிக்கை

* * *

வெள்ளத்தில் தோன்றியெழும் தண்ணீர் முட்டை
விரைவினிலே அழிந்துவிடும். ஆனால் மக்கள்
உள்ளத்தில் குடியேறும் தலைவன் கீர்த்தி
ஒருநாளும் அழிவதில்லை!....
— இதழ் : சுரதா (1-10-1969)

நெல் சேர்க்கும் வயலைப்போல்; குளிர்ச்சி
கொண்ட
நிழல் சேர்க்கும் மரத்தைப்போல்; வாயின் ஓரம்
புல் சேர்க்கும் மானைப்போல் புதுமை சேர்த்துப்
புகழ்சேர்க்கத் தெரிந்தோனே சிறந்தோன் ஆவான்
— இதழ் :சுரதா (15-5-1968)

நீரிருந்தால் அந்நீரில் நுரையி ருக்கும்
நிழலிருந்தால் அந்நிழலில் குளிரி ருக்கும்.
தேரிருந்தால் சக்கரங்கள் இருக்கு மென்றான்.
சிறப்பிருந்தால் புகழிருக்கும் என்று சொன்னான்
— இதழ் : உரிமை வேட்கை
— (1974-பொங்கல்மலர்)

வினையெச்சம் பெயரெச்சம் என்பர்; வாழ்வில்
வேறெச்சம் ஒன்றுளதாம்! அஃது காமப்
பனியெச்சம் என்கின்ற குழந்தை யன்று!
பாரிலது புகழென்னும் எச்ச மாகும்!
— இதழ் : சுரதா (அண்ணா மலர்)

கல்வி செழித்தால் கவிதை வரும்
கற்பனை கற்றால் திறமை வரும்
செல்வம் திரண்டால் செழிப்பு வரும்
திறமை மிகுந்தால் புகழ்வளரும்

* * *

"நீ விரிக்கும் விரிப்பென்ன?" என்று கேட்டான்
"நீள் குழலைப் பாயாக விரிப்பேன்" என்றாள்.
பூவிரிக்க மறப்பதில்லை மரங்கள்" என்றான்
"புகழ்விரிக்க முடிவதில்லை சிலரால்" என்றாள்.
— போபால் தமிழ்ச்சங்கம்
— சிறப்புமலர் (1966-67)

## ஈகை

தன்னிடத்தி லேவந்து கேட்போ ருக்குத்
தடையின்றித் தந்திடுவோன்; தலைவி யோடு
அன்றாடம் காண்பானே இரவு இன்பம்;
அதனை விட அதிகரித்த இன்பம் காண்பான்.

* * *

தூங்குவதே சுகமென்று கருதி விட்டால்
சோற்றினை நாம் கனவில்தான் காணக் கூடும்
வாங்குவதே பெருவழக்க மாகி விட்டால்,
மற்றவர்க்கு நாமெவ்வா றுதவக் கூடும்?

* * *

சிரிக்கச் சிரிக்கச் சிலரே பேசுவர்
சேரச் சேரச் சிலரே கொடுப்பர்

* * *

இடிப்பவன் மக்கள் நெஞ்சில்
இடம் பெறான் திருடிப் பாடல்
தொடுப்பவன் என்றோ ஓர்நாள்
தோற்றுப்போய் விடுவான். நாட்டில்
நடிப்பவன் பெருமை கொஞ்ச
நாளைக்கே நிலைத்தி ருக்கும்
கொடுப்பவன் பெயரை இந்தக்
குவலயம் மறப்ப தில்லை.

— நூல் : துறைமுகம்

## பெருமை

சிறப்பினால் மேலான செய்கையினால் அன்றிப்
பிறப்பினால் யாரும் பெருமை பெறுவதில்லை

## தியாகம்

உலகமெலாம் ஒட்டியுற வாட வேண்டி
உயிர்கொடுத்தார் லூதர்கிங். தியாக மென்னும்
தலைமுறையும் அலைமுறையும் அழிவ தில்லை,
தனிமனிதன் அன்புக்குத் தியாகம் எல்லை!

தேருக்குள் அச்சாணி! வையந் தன்னை
திருத்துதற்கோர் கருணைமகன்! அவன்தான்
தியாகி!

*— (13-4-1967-ல் சென்னை வானொலியில் 'தியாகம்' என்ற தலைப்பில் பாடியது)*

தந்தையும் தாயும் தருவது தேகம்.
தரணியில் சாவே முடிவுரை யாகும்.
தன்னலம் வேண்டிச் செய்வதே யோகம்.
தன்சுகம் யாவையும் இழப்பதே தியாகம்.

* * *

சேல்நினைந்தே குஞ்சுகளைக் கூர்ந்து நோக்கும்
சிறந்தசெயல் தாய்மீனின் தியாகம்; கொண்ட
சூல்நினைந்தே காப்பதெல்லாம் மனைவி தியாகம்;
சுற்றத்திற் குதவுவதே குடும்ப தியாகம்;
வேல்நினைந்தே எடுத்ததனைப் பகைவர் மீது
விட்டெறிதல் போராடும் வீரர் தியாகம்;
பால்நினைந்தே ஊட்டுவது தாயின் தியாகம்;
பாரியைப் போல் வழங்குவதே சிறந்த தியாகம்!

— *(13-4-1967-ல் சென்னை வானொலியில் 'தியாகம்' என்ற தலைப்பில் பாடியது)*

## எண்ணம்

நடையாடும் உலகத்தில் உள்ளார்க் கெல்லாம்
நாமெழுதிக் காட்டுகின்ற பாட லுக்கோர்
உடையாக இருப்பது தான் வடிவம்; பாட்டின்
உடலாக இருப்பதுதான் எண்ண மாகும்.

## சாமிகள்

உழுது பயிரிடும் உழவர்க ளெல்லாம்
வகுத்த வயலின் வரப்பு சாமிகள்!
தொழுதுண்டு வாழும் தொழும்பர்க ளெல்லாம்
கூம்பிய தாமரைச் சோம்பல் சாமிகள்!

## ஞானி

வெள்ளத்தை ஆளுகின்ற உழவர் தம்மை
'வெள்ளாளர்' என்பார்கள். ஒவ்வோர் நாளும்
உள்ளத்தை இறைவனிடம் ஒட்ட வைக்கும்
உத்தமனை உலகத்தார் ஞானி என்பர்.

— நூல் : துறைமுக

## துறவி

மறைவுக்குப் பின்னர் தோன்றும்
மரியாதை, பெருமை யெல்லாம்,
துறவிக்குத் தேவை யில்லை.
துறவிகள் நம்மைப் போல
உறவுக்குள் உறவு பார்க்க
ஒருபோதும் நினைப்ப தில்லை
அறிவுக்குள் அன்பைத் தேடி
அன்புக்குள் அவர்கள் வாழ்வர்.

## நிலையாமை

ஊருக்கு நன்மைசெயும் ஆற்றுத் தண்ணீர்
உண்டாக்கும் கண்ணாடிக் கொப்பு ளங்கள்;

ஓரிரண்டு வினாடிகளே நிலைத்தி ருக்கும்!
உடல்கூட அப்படித்தான்....

* * *

மண்என்றால், அணுஎன்றே அர்த்தம். சட்டி
மண்ணைப்போல் நம்உடலும் அணுவின்
சேர்க்கை
எண்ணங்கள் கண்ணுக்குத் தெரிவ தில்லை.
என்றாலும் அவைகூட அணுக்கள். இங்கு,
தொண்ணூறு நூற்றாண்டு வாழ்ந்திட்டாலும்,
சுட்டெரித்தால் தீர்ப்பென்ன? சாம்பல் தானே!

* * *

நேற்றிருந்தான் இன்றிருப்பார் என்ப தென்ன
நிச்சயமா? ஒன்றுமில்லை! தமிழ்ச்சங் கத்தில்
வீற்றிருந்த கீரனெங்கே? சேர சோழ
வேந்தரெங்கே? அலெக்சாண்டர் இப்போ
தெங்கே?
'கூற்றுவனே வந்தாலும் அஞ்சேன்' என்று
கூறியநம் அப்பரெங்கே? எல்லாம் மூச்சுக்
காற்றிருக்கும் வரையில் தான்! நம்மெல்
லோர்க்கும்
கால்கழிந்த கட்டிலன்றோ கடைசிக் கட்டில்?

## கூட்டல்

சித்திரங்கள் அத்தனையும் நிறத்தின் கூட்டல்
சேமிப்புத் திட்டமது பணத்தின் கூட்டல்
வித்தார காவியங்கள் பாட்டின் கூட்டல்
வெற்றிகளின் பிரசவந்தான் புகழின் கூட்டல்

* * *

அல்லிகளும் தாமரையும் குளத்தின் கூட்டல்
ஆறுகளும் ஏரிகளும் நீரின் கூட்டல்
சொல்லுகின்ற மந்திரங்கள் பொய்யின் கூட்டல்
சுகதுக்கம் இவ்விரண்டும் வாழ்வின் கூட்டல்

## கழித்தல்

நெல்லின் கழித்தல் பதராகும்
நெருப்பின் கழித்தல் புகையாகும்.
பல்லின் கழித்தல் அழுக்காகும்
பழத்தின் கழித்தல் தோலாகும்.

## வகுத்தல்

ஆயகலை அறுபத்து நான்கும் இங்கே
அறிஞர்களால் உருவான வகுத்த லாகும்.

வாயிதழ்கள் நம்முகத்தின் வகுத்த லாகும்.
வளர்கரங்கள் நம்முடலின் வகுத்த லாகும்.

* * *

தாயென்றும் தந்தையென்றும் தங்கை யென்றும்
தம்பியென்றும் மகனென்றும் மனைவி யென்றும்
சேயென்றும் சொல்வதெல்லாம் சமுதா யத்தைச்
சிதறாமல் காப்பாற்றும் வகுத்த லாகும்.

## பெருக்கல்

செந்நீர்தான் போர்களத்தின் பெருக்க லாகும்.
சிந்தனைதான் உள்ளத்தின் பெருக்க லாகும்.
வெந்நீர்தான் எரிமலையின் பெருக்க லாகும்.
வெளிச்சந்தான் சூரியனின் பெருக்க லாகும்.

* * *

தண்ணீர்தான் மண்முட்டை உலகந் தன்னைச்
சாப்பிட்டு ஏப்ப மிடும் பெருக்க லாகும்.
கண்ணீர்தான் ஏழைகளின் துன்பந் தன்னைக்
காட்டிக்கொண் டிருக்கின்ற பெருக்க லாகும்.

## கணக்கு

கணக்குதான் ஆதி காலக்
கடிகார மாகும். அந்தக்

கணக்கின்றிக் கால மில்லை!
கருவின்றி உயிர்கள் இல்லை.

* *

கணக்கொடு பத்து மாதம்
கருவறை தனிலி ருந்து
கணக்கொடு பிறந்து, கொஞ்ச
காலமிவ் வுலகில் வாழ்ந்து

கணக்கினை முடித்துக் கொண்டு
கண்மூடு கின்றோம் யாவும்.
கணக்கில்தான் அடக்கம், இங்கே
கணக்கின்றி எதுந டக்கும்?

## அழகு

சொல்லுக்குச் செந்தேன் தந்தாள்.
சுனைநீர்க்குக் குளிர்ச்சி தந்தாள்.
அல்லிக்குச் செவ்வாய் தந்தாள்.
அழகுக்கே அழகு தந்தாள்.

* * *

இயற்கையின் காட்சி தன்னை
எழிலென்று சொல்லு வார்கள்
செயற்கையின் வடிவம் தன்னை
அழகென்று செப்பு வார்கள்

## ஆசை

இருட்பார்வை நமக்குண்டு-நமக்கு
எதிலும் ஆசையுண்டு.
அருட்பார்வை துறவிகளின்-நெஞ்சில்
ஆசை இருப்பதில்லை

ஓசையிலே உருப்பெற்ற தாகக் கூறும்
உலகத்தில் உறவாடும் மக்கள் வாழ்க்கை
ஆசையிலே ஆரம்பம்! இன்ப துன்பம்
அத்தனைக்கும் நாம் கட்டுப் பட்ட மக்கள்

— 'மணிப்புறா' என்னும் நூலுக்கு எழுதிய
அணிந்துரை,

## ஏக்கம்

மூதறிஞர் முதுமொழிகள் முத்திரைப்பொன் னாகும்,
மொழியுணர்ச்சி ஓரினத்தின் முதலுணர்ச்சி
யாகும்,
நீதி நெறி விளக்கமெல்லாம் அனுபவங்க ளாகும்,
நிறைவேறா எண்ணமெல்லாம் ஏக்கங்க ளாகும்.

— நூல் : துறைமுகம்

# காதல்

இனிக்கின்ற காதல்தரும் போதை போல
இவ்வுலகில் வேறில்லை, என்றாள் மங்கை
மனிதர்க்குச் சொர்க்கமென்ப திதுதான், காதல்
மயக்கந்தான் மதிப்புதரும் மறதி யாகும்.
— இதழ் : 'தாரகை'

'தண்ணீரின் ஏப்பந்தான் அலைகள்' என்றான்.
'தமிழ்க்கலைகள் வாழ்நாளை வளர்க்கும்'என்றாள்
'விண்மீது விளங்குகின்ற நிலவின் மீது
வீடு கட்டும் காலமொன்று வந்தே தீரும்
கண்ணாலே கதைசொல்லும் மாதே!' என்றான்
கட்டழகி மொட்டு மெட்டாய்ச் சிரித்தாள்!
'யாவும்
பெண்ணாலே ஆகு 'மென்றான்' அதனைக்
கேட்டுப்
பிழிந்ததொரு புடவையெனக் குனிந்து
கொண்டாள்.

* * *

என்பெயர் அன்ன மென்றேன்- பசிக்
கில்லையோ அன்னமென்றார்!
பொன்மணி மண்டபத்தில்-இதழ்ப்
புன்னகை அன்னமிட்டேன்.

காவிரி ஆழமென்றேன்-அவர்
காதலே ஆழமென்றார்!
சேவலேன் கூவுதென்றேன்-விழிச்
சேனையேன் தாக்குதென்றார்!

— இதழ்:'சுரதா'(1-5-1968)

கத்தியின் யுத்தமும், தித்திப்பு முத்தமும்
வீரத்தை, சுவையை வளர்க்கும் கலைகள்.
ஐந்து பொருளால் ஆனஇவ்வுலகில்
இன்பக் கலைகள் எத்தனை இருப்பினும்

காதலை வளர்க்கும் கலையே சிறந்தது!
காதலோ, குடும்பக் கலையின் விளக்கம்!

— 'குடும்பக்கலை' ஆண்டுமலர்

பல்லவியைச் சரணம் போய்த் தழுவல் போன்று
பாவையவள் தோள்தழுவி மகிழ லானான்.

— இதழ் : உரிமை வேட்கை
— (1974-பொங்கல்மலர்)

ஆதிநூல் குறிக்கும் அன்பின்
ஐந்திணை என்னும் இன்பக்
காதலே, நெஞ்சும் நெஞ்சும்
கலந்திடும் வாழ்க்கை யாகும்.

* * *

விருந்தாலே பசிதீரும்; ஆனால் காதல்
வெப்பத்தில் கொந்தளிக்கும் நோயே, எந்த
மருந்தாலும் தீர்வதில்லை; காதல் நோயை
மந்திரங்கள் தீர்ப்பதில்லை;மங்கை தீர்ப்பாள்.

* * *

மேலிடம் வேண்டுமென்றாள்-மணல்
மேட்டினைக் காட்டிநின்றாள்.
நாலிடம் உள்ளதென்றாள்-அதில்
நடுவிடம் தேவையென்றாள்.

* * *

நீர்தந்தாள், அழகியிடம் நெஞ்சம் தந்தான்
நெஞ்சத்தை அவன்தரவே அவளும் தந்தாள்.
— இதழ் : சுரதா (15-3-1968)

பட்டப் பகல்சுடும். கட்டை அனல்சுடும்.
பாலைவ னம்மிக வும்சுடும்-காதற்
பிரிவு இவற்றை எல் லாம்சுடும்!
— நூல் : தொடாத வாலிபம்

கசிந்து வரும் தேன்மதுர மொழியி னாலே,
"கற்கண்டே"! என்றழைத்தான் அவளோ
நெஞ்சைப்
பிசைந்து வரும் ஆசையொடு திரும்பிப் பார்த்தான்.
பேரழகன் ஆரணங்கை விரும்பிப் பார்த்தான்.
— இதழ் : காஞ்சி
(1966-பொங்கல்மலர்)

சற்று நீ பிரிந்திட் டாலும்
　　தளருவேன்! தனிமை நோயால்
குற்றிய உலக்கை யாவேன்!
　　கொதித்திடும் வெந்நீ ராவேன்!
— இதழ் : 'சுரதா'(15-4-1968)

ஓவியத்தால் அழகுவரும்; மாந்தர் உண்ணும்
உணவதனால் உடல் செழிக்கும், உறுதி சேரும்.
ஆவியொத்த காதலினால், அணுக்கள் தோறும்
அமுதூறும், வாழ்நாளும் வளரும்
— இதழ் : சுரதா(1-5-1968)

முத்தத்தி லேயிருக்கும் இனிமை, நீண்ட
　　முதிர்கரும்பி லும் இல்லை என்றாள். காதல்
நித்திரையி லேசோர்வு ஏற்பட் டாலும்,
　　நிச்சயமாய் அதைப் போன்ற ஓய்வு இல்லை
— இதழ் : காவியம்(28-10-1955)

பூவென்றால் தாமரையே! என்றாள். அந்தப்
　　பூப்போன்று சிறந்தவள் நீ என்றான் சொக்கன்.
காவென்றால் குளிர் சோலை என்றாள். அந்தக்
　　காவைப்போல் காப்பவளே என்றான் சொக்கன்
— நூல் : தேன்மழை

இலையொடு மலர்கள் இன்றேல்
　　எதற்கந்தக் கொடிகள்? நெஞ்சில்

கலையுணர் வில்லை என்றால்
காதலும் கசந்து போகும்.

* * *

குயிலுக்கு மாமரமே கோடை மேடை
கோபுரமே புறாக்கூட்டம் கொஞ்சும் மேடை
மயிலுக்கு மலைக்குறிஞ்சி நிலமே மேடை
மஞ்சந்தான் காதலரின் சிறந்த மேடை

* * *

வீரத்தில் ஒருவனுக்கே வெற்றி ! காதல்
வித்தையிலே இருவருக்கும் வெற்றி!

* * *

முத்துக்கும் ஒளிவழங்கும் முத்தே! என்றன்
மூச்சாக இருப்பவளே! முல்லைப் பூவே
சத்தத்தில் புவிபிறந்த தென்பர்; கட்டித்
தங்கத்தில் நீபிறந்தாய் ! அதுவே உன்தாய்.

— இதழ் ; சுரதா (15-3-1968)

வீரத்தின் அடையாளம் படைக ளாகும்
விவேகத்தின் அடையாளம் கீர்த்தி யாகும்
ஈரத்தின் அடையாளம் தண்ணீ ராகும்
இன்பத்தின் அடையாளம் காத லாகும்.

* * *

சர்க்கரையே! என்றழைத்தான். உடனே மங்கை
சர்க்கரைக்குத் தமிழிற்சொல் இலையோ?
என்றாள்

அக்காரம் என்றதமிழ்ச் சொல்லுண் டென்றான்.
அதற்குப்பின் அவளிதழைக் கனிபோல் தின்றான்.

கல்வீரன் கண்களினால் கோடு போட்டான்.
கட்டழகி கால்விரலால் கோடு போட்டாள்.
வில்லாடும் புருவத்தாள் சொக்க வைத்தாள்
விக்கலுக்கு நீர்கேட்டுச் சிக்க வைத்தான்.

— *இதழ் : சுரதா (15-3-1968)*

## நினைவுகள்

நீரூற்றி நகத்தை
வளர்ப்பதில்லை-இன்ப
நினைவுகள் பிறர்சொல்லிப்
பிறப்பதில்லை!

— *இதழ் : சுரதா (1-5-1968)*

கண்ணில் கிடந்த கனவுகளே
காலையில் நிமிரும் நினைவுகளாம்!

## நட்பு

மரக்கிளை மலர்களோ மலர்ந்தால் மறுபடி
குளத்து மலர்போல் கூம்புவ தில்லை.
குறையிலார் நட்பும் கூம்புவ தில்லை.

## அன்பு

தாழம்பு முட்பூ; கொக்கு
சந்தேகப் படும்பூ; நெஞ்சில்
வாழும்பூ அன்பு; வானம்
வளர்க்கும் பூ நிலாப்பூ..

— நூல்: துறைமுகம்

## சுவை

உலகம் நினைவின் தொடராகும்
உயிர்கள் கருவின் கதையாகும்
விலகும் நிலையே பிரிவாகும்.
விரும்பும் பொருளே சுவையாகும்.

— நூல் :- தேன்மழை

## திருமணம்

மதிக்கின்ற செங்கதிரில் வெடித்து வந்த
வயதான உலகத்தில் திரும ணந்தான்
விதையாகும் உயிர்க்கூட்டம் முளைப்ப தற்கு!.
மேலுமிது தித்திப்புச் சேர்க்கை யாகும்.

— இதழ் : 'காவியம்' (4-11-1955)

நாணமே பெண்மைக்கு நல்ல மதிப்புரை
திருமண வாழ்க்கையே சிறந்த பதிப்புரை
— நூல்: சுவரும் சுண்ணாம்பும்

ஒருவருக் கொருவர் துணை யாவ தற்கும்
ஒட்டியுற வாடிசுகம் காண்ப தற்கும்,
திருமணமே நல்லதொரு நிகழ்ச்சி யாகும்.
திருமணத்தால் சமுதாயம் சுத்த மாகும்.

* * *

மணமென்றால் புகழாம்! அந்த
வான்புகழ் சிலர்க்கே வாய்க்கும்!
மணமென்றால் வாசம்; அந்த
வாசமே மலரின் மூச்சாம்!
மணம்செய்து கொள்வ தில்லை
மலரினம் நம்மைப் போல!
மணமின்றித் தனித்து வாழும்
வாழ்க்கையும் சிறப்ப தில்லை!
— (6-7-70-ல் ஒருதிருமண வாழ்த்தில்)

## கலப்புமணம்

நிலத்தில்நாம் உண்டாக்கும் கலப்பை, மக்கள்
நெஞ்சத்தில் உண்டாக்கி விடுவோ மானால்,
கலப்புமணம் உருவாக வழியுண்டாகும்.
கலப்புமணத் தால்சாதி செத்துப்போகும்

ஒட்டாமல் உறவில்லை, கலப்பு இன்றி
உலகத்தில் தனிப்பொருளால் எதுவு மில்லை!
வெட்டாமல் குளம்வருமா? அரும்பின் கூட்டம்
விரியாமல் இருந்துவிடில் மணந்தான் ஏது.
— இதழ் : இலட்சிய வாதி (1-7-1958)

காதலிலே ஈடுபட்டால், நாட்டு மக்கள்
கலப்புமணம் செய்துகொள்ள ஒப்புக்
கொண்டால்
சாதிகளே வேரற்று வீழ்ந்து போகும்
சாத்திரமும் கோத்திரமும் கண்ணை மூடும்
* * *
கலப்பு மணம் நெய்தல்நிலம் போன்ற தாகும்;
காதல் மணம் குறிஞ்சி நிலம் போன்ற தாகும்;
மலர்ச்சிதரும் சீர்திருத்த மணமோ, செந்நெல்
வயல்சார்ந்த மருதநிலம் போன்ற தாகும்.

## தாலி

நான்நீ தனித்தனி, நங்கையே இன்று
தான் நீ எனக்கு நீ, தையல் உனக்குநான்;
நான்தான் நீ-இனி நான்தான் நீ-யெனும்
தத்துவ விளக்கமே தங்கத் தாலியாம்.
— நூல் : கவரும் கண்ணாம்பும்

## கணவன்

கேட்பாளன் கணவன்! வீட்டுக்
　கிளியிடம் தினமும் கெஞ்சும்
வேட்பாளன் கணவன்........

## மனைவி

தாய்க்குப்பின் தாரமென்பார்; சிறப்பு மிக்க
　தாரத்தால் வருவதுசும் சார மென்பார்

* * *

புத்தகங்கள், முத்தமிடும் மனைவி, சொற்கள்
　புரியாத மழலைமொழி பேசும் மக்கள்
இத்தரைமீ தினில்ஒவ்வோர் மனித னுக்கும்
　இருப்பதுவே சிறப்பாகும்; இருக்கு மாயின்,
புத்தகத்தால் பேரறிவும், குழந்தைப் பேச்சால்
　பூரிப்பும், மனைவியினால் சுகமும் சேரும்.
எத்தனைபேர் இருந்தென்ன? மனைவி இல்லான்
　இல்வாழ்க்கை கரும்புக்கு வெறும்பூ அன்றோ?

— நூல் : தேன்மழை

மாதமும் ஆண்டும் போல
வாழ்பவள் மனைவி! வீட்டின்
சோதியே அவள்தான்! தக்க
துணைவியும் அவளே யாவாள்.

* * *

அகம்புறம் இரண்டில், காதல்
அதிகாரம் மனைவி ஆவாள்.
பருபதம் கணவன் என்றால்
பகாபதம் மனைவி! நெஞ்சில்
புகுமுகம் எதுவோ அந்தப்
புதுமுகம் மனைவி! இன்ப
சுகமெனும் நதிக்கு, நல்ல
தோணியும் அவளே யாவாள்.

* * *

நிலவுக்கு மனைவி விண்மீன்
நினைவுக்கு மனைவி எண்ணம்
அலைகடல் நீருக் கெல்லாம்
ஆறுதான் மனைவி.........

* * *

நாடு நலம்பெற வேண்டும் – எனில்
நல்ல தலைவர்கள் வேண்டும்.
வீடு விளங்கிட வேண்டும்–எனில்
வேல்விழி மங்கையர் வேண்டும்.

– இதழ் ; சுரதா (15-3-1968)

நண்பரின் துணையோ நீடிப்ப தில்லை.
மனைவியின் துணைதான் மரணம் வரையிலும்
நீண்ட படியே இருக்கும் நெடுந்துணை.

* * *

வெட்டுண்ட பாக்கைப் போல
விலகாமல், வகுத்த வாழ்வில்
கட்டுண்டு கடமை செய்யும்
காரிகை மனைவி யாவாள்.

## கட்டில்

அரசு கட்டில் அந்நாளில் இருந்தது.
முரசு கட்டில் முன்னாளில் இருந்தது.
கோனாட்சி மாறிக் குடியாட்சி வந்ததால்
இருவகைக் கட்டிலும் இந்நாளில் இல்லை!

* * *

மங்கை யானபின் மாப்பிள்ளை தேவை
கல்யாண மானபின் கட்டில் தேவை

* * *

ஆடி அடங்கும் வாழ்க்கையடா!
ஆறடி நிலமே சொந்தமடா!
முதலில் நமக்கெல்லாம் தொட்டிலடா! - கண்
மூடினால் காலில்லாக் கட்டிலடா!

– 'நீர்க்குமிழி'படப்பாடல்

## முதலிரவு

முகமும் முகமும் முத்தமும் முத்தமும்
சுகமும் சுகமும் தோன்றுதற் குறிய
அறிச்சுவடி இரவே ஆனந்த இரவாம்!
ஆண்பெண் இருவர்க்கும் அதுமுத லிரவாம்!

## மௌனம்

அறிவிலா மூடரின் அறியா மைக்கு,
மௌனமே சிறந்த மேலாடை ஆகும்!

* * *

பாரிதான் மனித மேகம்
பறவைதான் உயிர்வி மானம்;
மாரிதான் முகிலின் வேர்வை;
மௌனந்தான் உதட்டின் போர்வை.

— நூல் : துறைமுகம்

## முத்தம்

முத்தமோ உதட்டுச் சண்டை!
முறையாக நடத்து கின்ற
ஒத்திகை! கூடிஇல் லாத
ஒற்றடம்!............

# இன்பம்

எப்படியும் ஏழ்மைநிலை மாற வேண்டும்
இல்லாவிட் டால்உடனே மாற்ற வேண்டும்
அப்போது தான்நாட்டில் வாழும் மாந்தர்
அனைவர்க்கு மேஇன்பம் கிடைக்கும் .........

— இதழ் : 'காவியம்' (10-2-56)

கொட்டைகைக்குத் தீவைத்தல்; குறும்பு செய்தல்,
குடிகெடுத்தல் அத்தனையும் துன்பம் தீட்டும்
அட்டவணை என்பதனை அறிக. தீமை
அணுகாத நிகழ்ச்சிகளே இன்பம் என்க.

— (13-4-1968-ல் சென்னை வானொலியில் '
'இன்னா செய்யாமை' என்ற தலைப்பில்
பாடிய கவிதை)

துன்பங்கள் சுருக்கென்று தைப்ப தாலே,
துன்பத்தை ஊசியுடன் ஒப்பிட் டார்கள்.
' இன்' என்றால் இன்பத்தைக் குறிக்கும்; அந்த
இன்பந்தான் உலகத்தை ஒன் று சேர்க்கும்.

— (13-4-1968-ல் சென்னை வானொலியில்
'இன்னா செய்யாமை ' என்ற தலைப்பில்
பாடிய கவிதை)

பழந்தமிழ் கற்றல் இன்பம்
பலநாடு சுற்றல் இன்பம்
எழுந்திடு புதுமை தன்னை
ஏற்றிடல் வாழ்வுக் கின்பம்

– நூல் : தேன்மழை

துன்பங்கள் இன்பத்தின் முற்றுப் புள்ளி
துடிக்கின்ற இளமையிலே நமக்குத் தோன்றும்
இன்பங்கள் அனைவருமே விரும்பும் பள்ளி.

## மகிழ்ச்சி

காதல் நிகழ்ச்சியோ இருவரின் மகிழ்ச்சி!
திருவிழா நிகழ்ச்சியோ முழுஊர் மகிழ்ச்சி!

## குடும்பம்

இரவும் பகலும் இயற்கைக் குடும்பம்!
எண்ணும் எழுத்தும் இலக்கியக் குடும்பம்!
பாட்டும் பரதமும் நாட்டியக் குடும்பம்!

* * *

குழந்தை குட்டிகள் கூடுத லானால்
அந்தக் குடும்பமும் அவர்கள் வாழ்க்கையும்
பாறையில் மோதிய படகுபோ லாகும்.

## தாய்

இலையை மலரைக் காய்களைக் கனிகளைத்
தருவத னாலே தருவென் றழைக்கிறோம்
தருவைப் போன்று தருபவள் ஆதலின்
தாலாட்டும் அன்னையைத் தாயென்
றழைக்கிறோம்.

* * *

இருவென்றோ இலையென்றோ சொல்லி டாமல்
இருப்பவற்றைத் தருகின்ற காரணத்தால்
தருவென்று மரத்திற்குப் பெயரிட் டார்கள்.
தருவைப்போல் தருபவளைத் தாயென் றார்கள்.

* * *

தனிமை என்பது பிரிவின் சரித்திரம்
தாய்மை என்பது கருவின் சரித்திரம்

* * *

ஓரறி உயிர்களின் கருவறை பூமியாம்!
ஆறறி உயிர்களின் கருவறை அன்னையாம்.

## குழந்தை

தாமரையும் அல்லிகளும் தண்ணீர்ப் பூக்கள்
தளிர்போன்ற குழந்தைகளே மழலைப் பூக்கள்

நம்பிக்கை இன்றிபாரில் நட்பு இல்லை - முழுதும்
நனைந்து போனவர்க்கு ஈரம் இல்லை - எதற்கும்
கும்பிடும் மனப்பான்மை சிறப்பு இல்லை - கைக்
குழந்தையைப் போல் சிறந்த ஞானி இல்லை.
— (இசைப்பாடல்)

கற்றோரின் அறுவடை கருத்தாம்! அதுபோல்
பெற்றோரின் அறுவடை அதுவே பிள்ளையாம்.

* * *

தன்னலத்தைக் காப்பதுவே பிறசெல் வங்கள்
தாய்மையினைக் காப்பதுவே குழந்தைச் செல்வம்.
அன்னைக்கும் தந்தைக்கும் குடும்ப வாழ்வின்
அரணாகும்! கருவூலச் செல்வ மாகும்.

* * *

குழந்தை பெறாத கோதை இல்லம்
அழகிய தாயினும் அஃதோர் 'வீண்இல்'!
குழந்தை ஈன்றிட இடந்தரும் இல்லம்
எதுவோ அதுவே 'ஈன்இல்' ஆகும்.
— இதழ்: 'சுரதா' (15-3-1968)

கண்ணின் இயக்கமே காதலாம்! காதலர்
கட்டில் இயக்கமே கருப்பமாம்! மற்றதன்
தொட்டில் இயக்கமே சொந்தக் குழந்தையாம்!

* * *

இலையின் இளமையே இளந்தளிர்; அந்த
இளந்தளிர் போன்றதே இன்பக் குழந்தை.

## தொட்டில்

பசலைக் குழந்தையின் படகுதான் தொட்டில்
ஒவ்வொரு குழந்தைக்கும் அதுதான் ஊஞ்சல்.

## குடும்பநலம்

பெண்ணொன்று பெற்றபின் ஆணொன்று
பெறவும்,
ஆணொன்று பெற்றபின் அடுத்தொன்று பெறவும்,
அடுத்தொன்று பெற்றபின் அடிக்கடி பெறவும்,
ஆசைப் படுவதும் அவசரப் படுவதும்,
ஒப்ப முடியாத தப்பித மாகும்.

* * *

திட்டமிட்ட குடும்பந்தான் மகிழ்ச்சி யோடும்
சிறப்போடும் வாழ்ந்துவர முடியும்! போலிப்
பட்டமிட்ட படிப்புக்கும் திட்ட மிட்டுப்
பண்படுத்தா வாழ்வுக்கும் சிறப்பே இல்லை.

— நூல்: துறைமுகம்

பன்மக்கட் பேறு பெற்றால்
　　பட்டியல் நீள மாகும்!
நன்மக்கட் பேறு பெற்றால்
　　நாட்டுக்கே பெருமை சேரும்.
　　— நூல்: 'பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க'
(திருமண வாழ்த்துக்கவிதை)

குடும்பநலம் செல்வத்தால் வரலாம்; பத்துக்
　　குழந்தைகளைப் பெற்றுவிட்டால் வருமா? நல்ல
குடும்பநலம், ஓயாமல் குழந்தை பெற்றுக்
　　கொண்டிருக்கும் இல்லத்தில் இருப்ப தில்லை.
— நூல்: துறைமுகம்

உறவில் உருவாகும் ஒவ்வொரு குழந்தையும்
அடக்க முடியாத உணர்ச்சியின் அறுவடை
அதனைத் தடுக்கும் அணையே கருத்தடை
— நூல்: சுவரும் சுண்ணாம்பும்

குறைந்தசட் டங்களும் நிறைந்த உரிமையும்
உள்ள நாடே நல்ல நாடாம்.
ஓரிரு குழந்தைகள் உள்ள வீடே
குடும்ப நலங்கள் குறையாத வீடாம்.
— நூல்: சுவரும் சுண்ணாம்பும்

தக்கபடி இல்லறத்தில் இன்பங் காணச்
சமுதாயம் சீரடைய, மக்கள் பேற்றில்

சிக்கனத்தைக் கையாள வேண்டும். இன்றேல்
தேய்பிறைபோல் குடும்பநலம் தேய்ந்தே போகும்.

— *இதழ்: சுரதா (1-10-69)*

## வீடு

மருமகள் தண்ணீர் போலும்,
மாமியார் நெருப்பு போலும்,
இருந்திடில் அந்த வீடே
இருள்சூழ்ந்த வீடே யாகும்.

## வாழ்க்கை

போர்வாழ்க்கை என்ப தெல்லாம்
புறப்பொருள் வாழ்க்கை யாகும்.
சீர்வாழ்க்கை அன்பும் பண்பும்
சேர்வதால் அமைவ தாகும்.
ஏர்வாழ்க்கை வையத் திற்கே
எடுத்துக்காட் டான வாழ்க்கை!
நேர்வாழ்க்கை கோணு மாயின்
நிலம்கோணும் நெஞ்சும் கோணும்.

— *('போர்க்களத்தில் பாரதம்" என்னும் நூலுக்கு எழுதிய அணிந்துரை)*

வெட்டுவது கொலையாகும்; அழகு சேர்க்க
விரும்புவது கலையாகும். அன்பும் பண்பும்
ஒட்டுவது மிகச்சிறந்த வாழ்க்கை யாகும்.
உறங்குவது சோர்வாகும்.........

* * *

எப்படியும் வாழ்வதுதான் வாழ்க்கை என்றே
எண்ணுபவன் பொறுப்பற்ற மனித னாவான்.
இப்படித்தான் நாம்வாழ வேண்டு மென்றே
எண்ணுபவன் சமூகத்தில் உயர்ந்தோன் ஆவான்.

— நூல்: துறைமுகம்

போர்வாழ்க்கை என்ப தெல்லாம்
புறப்பொருள் வாழ்க்கை யாகும்.
சீர்வாழ்க்கை அன்பும் பண்பும்
சேர்வதால் அமைவ தாகும்.

— இதழ்: சுரதா (1-7-68)

தைப்பனி சுடுவ தில்லை!
தமிழ்க்கவி கசப்ப தில்லை!
மெய்ப்பொருள் காணும் வாழ்வில்
வேற்றுமை எழுவதில்லை!

* * *

விதையின் வளர்ச்சியை மரத்தில் பார்
விளக்கின் வளர்ச்சியை சுடரில் பார்

மதியின் பெருமையைப் புகழில் பார்
வாழ்வின் பெருமையைச் சுகத்தில் பார்
— இசைப்பாடல்

ஏழ்மையும் ஏற்றத் தாழ்வும்
இன்பமும் இன்பந் தன்னை
பாழ்செய்யும் துயரும், ஒன்று
பட்டதே வாழ்க்கை யாகும்.

## தலைவன்

நெற்பயிர்க்கு உழவன்தான் தலைவன்; நாட்டின்
நெருக்கடிக்குத் தீயவனே தலைவன்; விண்ணில்
அற்புதங்கள் செய்வதற்கு விஞ்ஞா னத்தை
அறிந்தோனே சரியான தலைவ னாவான்.

* * *

கற்பனைக்குக் கவிஞன்தான் தலைவன்; காணும்
கனவுக்குக் கண்ணேதான் தலைவன்; ஒன்றை
விற்பதற்கு வணிகன்தான் தலைவன்; நாட்டின்
விடுதலைக்குத் தூயவனே தலைவன்......

* * *

ஏடாள வேண்டியவன் புலவன்; யாழில்
இசைமீட்ட வேண்டியவன் பரிசில் வாணன்.
வீடாள வேண்டியவள் மனைவி; நல்ல
விதிவகுக்க வேண்டியவன் தலைவன்......
— நூல்: துறைமுகம்

விரிந்த மூளையாம் வெள்ளைக் கடலில்
மூழ்கி மூழ்கி முத்துக் குளிப்பவன்
அறிஞன். அவனோ அரிதாய்ப் பிறப்பவன்.
தரணியில் அவனே புகழுக்குத் தலைவன்.

## மது

வானுக்கு வருவது மாலை மயக்கம்
வண்டுக்கு வருவது மதுவின் மயக்கம்
மாலைமயக்கம், மகிழ்ச்சி கொடுக்கும்.
மதுவின் மயக்கம் வாழ்வைக் கெடுக்கும்.

*— இதழ்: சுரதா (15-4-1968)*

## ஒழுக்கம்

எவன்பெரியோன் எனக்கேட்டால், உலகம்
போற்றும்
இலக்கியங்கள் படைப்பவனே பெரியோன்
ஆவான்.
எவன்பெரியோன் என்றாலும் ஒழுக்கம் வேண்டும்.
ஏனென்றால், ஒழுக்கந்தான் வாழ்வின் வாசல்!

*— இதழ்: 'சுரதா'(1-5-1968)*

## சிக்கனம்

வாசல் முதல்சமை யலின்அறை வரை
மக்களுக்கு வேண்டும் சிக்கனம் - நம்
ஆசை அலங்காரம் அனைத்தும் குறைத்திடல்
அவசியம் மிக்க அவசியம்.

*— (23-10-65-ல் 'போர்ப்பரணி'*
*வானொலி நிகழ்ச்சியில் பாடியது)*

சிரமங்கள் பெரும்பாலும் குறைய வேண்டின்
சிக்கனத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். யாரும்
பரபரப்பாய் மினுமினுப்பாய் வாழ்வ தாலே
பயனில்லை! நாட்டுக்கும் நன்மை இல்லை.

— நூல்: துறைமுகம்

பேரோடும் புகழோடும் வாழ்வ தற்குப்
பேரறிவே துணைபுரியும்; நாமெல் லோரும்
சீராக எப்போதும் வாழ்வ தற்குச்
சிக்கனந்தான் துணைபுரியும்!....

— நூல்: துறைமுகம்

தராள மனப்பான்மை என்று சொல்லித்
தண்ணீரைப் போற்பணத்தைச் செலவு செய்தல்

தீராத வறுமைக்கு வித்தாம்! வாழ்வில்
சிக்கனந்தான் ஒருவனது சிறந்த சொத்தாம்.
— நூல்: துறைமுகம்

உரைநடையின் சிக்கனந்தான் கவிதை; ஓங்கும்
உணர்ச்சிகளின் சிக்கனந்தான் அடக்கம்; காதல்
வரவேற்பின் சிக்கனந்தான் பெண்ணின் நாணம்;
மாளிகையின் சிக்கனந்தான் குடிசை யாகும்.
— நூல்: துறைமுகம்

சேவிக்க வேண்டுமெனில் பக்தி வேண்டும்
சேமிக்க வேண்டுமெனில் புத்தி வேண்டும்
சேவிக்க பக்தியெனில் பொருளைப் போற்றிச்
சிறப்படைய சிக்கனந்தான் முதலில் வேண்டும்.

## இல்லாமை

கல்லாமை ஒழிந்தாக வேண்டும். நல்ல
காவியங்கள் புதிதாகத் தோன்ற வேண்டும்.
எல்லார்க்கும் சமஉரிமை வேண்டும். நாட்டில்
இல்லாமை இல்லாமல் ஒழிய வேண்டும்.

## வறுமை

நிதியில்லை எனக்கோர் காணி
　　நிலமில்லை வீடு வாசல்
எதுவும்நான் பெற்றே னில்லை
　　என்பது வறுமை அன்று.
மதிநுட்பம் இலாமை ஒன்றே
　　மாந்தர்க்கு வறுமை யாகும்.
இதைநன்கு புரிந்து கொண்டால்
　　இல்லையென் றேங்க மாட்டார்.

— நூல்: தேன்மழை

ருதுவாகி மலரும் ரோஜாப் பூவின்
கூரிய முட்கள் குத்துதல் போலே
வறுமையும் துன்பமும் வாழ்வினைக் குத்தும்.

* * *

இலைகள் உதிர்த்தமரம்
　　ஏந்தும் கிளைகளெல்லாம்
வலைநிழல் போன்றிருக்கும் - கிளியே
　　வறுமை நிலைகுறிக்கும்.

— நூல்: தேன்மழை

## பசி

உறக்கம் வந்தால் மனம் ஓயும்.
உணவு கிடைத்தால் பசிஓயும்.

*   *   *

சந்தங்கள் யாவும், பாட்டுத்
தமிழ்த்தோழி யாகும். செந்தீப்
பந்தங்கள் யாவும், என்னைப்
பசிகொண்ட வெளிச்ச மாகும்

*   *   *

பழிவந்தால் பயப்படுவர் மேலோர்; வாட்டும்
பசிவந்தால் பயப்படுவர் தாழ்ந்த மக்கள்.
— நூல்: தேன்மழை

## கோபம்

கள்ளத்தால் சிலரழிவர்; ஏழை மக்கள்
கண்ணீரால் சிலரழிவர்; பொறாமை என்னும்
உள்ளத்தால் சிலரழிவர்; கோப மென்னும்
உணர்ச்சியினால் சிலரழிவர்;......

*   *   *

ஆற்றினது கோபத்தை வெள்ள மென்பர்
அரசனது கோபத்தை வீர மென்பர்
காற்றினது கோபத்தைப் புயலென் பார்கள்
கடலினது கோபத்தை ஊழி என்பர்.

மாற்றறியாப் பசும்பொன்னைப் போற்சி றந்த
 மங்கையரின் கோபத்தை ஊட லென்பர்
ஊற்றினது கோபத்தை அருவி என்பர்
 உயர்ந்தோரின் கோபத்தைச் சாப மென்பர்.

## குற்றம்

மழைகுறிக்கும் மேகத்தின் நிறத்தைப் போன்று
மனமிருண்டால் வஞ்சகந்தான் வளரும்.
தோன்றும்
குழிகுறிக்கும் இடமெல்லாம் தண்ணீர் தங்கும்.
குற்றமெலாம் தீயோரின் செயலில் தங்கும்.

— (13-4-1968-ல் சென்னை வானொலியில்
— 'இன்னா செய்யாமை' தலைப்பில் பாடிய கவிதை)

## கைதி

காதலன் என்பவன் காவற் கைதி
கணவன் என்பவன் ஆயுட் கைதி
கவிஞன் என்பவன் கற்பனைக் கைதி
புலவன் என்பவன் புத்தகக் கைதி

— நூல்: சுவரும் சுண்ணாம்பும்

## துன்பம்

வாயை விட்டு வெளிவரும் வார்த்தையை
மறுபடி விழுங்கவா முடியும்-ஓர்
ஆயிரம் தடவை அழுது புலம்பினும்
அதனால் துயரமா குறையும்.

* * *

'தென்' என்றால் தென்திசையைக் குறிக்கும்;
மேலும்
தென்னையெனும் மரத்தினையும் சுட்டிக் காட்டும்.
'துன்' என்றால் துணிதைக்கும் ஊசி யாகும்
துன்பமெலாம் ஊசிமுனை போலே குத்தும்.
(13-4-1968-ல் சென்னை வானொலியில்
— 'இன்னா செய்யாமை' என்ற தலைப்பில்
பாடிய கவிதை)

உருண்டோடிக் கொண்டிருக்கும் கூழாங் கல்லில்
ஒருபோதும் பாசிவந்து படிவ தில்லை.
வரவுக்குத் தக்கபடி செலவு செய்து
வருவோரைத் துன்பங்கள் தொடுவ தில்லை.

* * *

திண்டாட வைப்பதுவும் துன்பம்; நம்மைத்
தெருவோரம் நிறுத்துவதும் துன்ப மாகும்.
கண்ணீரும் தண்ணீரும் ஒன்றா னாலும்
கண்ணீரே, துன்பத்தில் ஊஞ்ச லாகும்.

அரியசெயல் செயாவிடினும் காலப் போக்கை
அனுசரித்து நடந்துகொள்ளத் தெரிந்து
கொண்டால்
உரியபயன் நிச்சயமாய்க் கிட்டும். இன்றேல்
ஒவ்வொருநா ளுந்துன்பம் கதவைத் தட்டும்.

* * *

வெடுக்கென்று நிலைமாறும் துன்பம் தொட்டால்
விழிக்கென்றோர் புதியமழைப் பருவம் தோன்றும்.
குடைக்காம்பே போல் வாழ்வும் தலைகீ ழாகும்.
குறிலோசை நெடிலாகி மேலும் நீளும்.

## கண்ணீர்

தூங்கும் பாளையின் தொண்டையி லிருந்து
வடிவது கள்ளாம். வருத்தமும் கவலையும்
ஒன்று சேர்ந்தே உருட்டித் தள்ளிடும்
கற்களே உப்புக் கண்ணீர்த் துளிகளாம்.

* * *

தூங்கும் பாளையின் தொண்டையி லிருந்து
வடிவது கள்ளாம்! வருத்தமும் கவலையும்
உறுத்தும் இமைகளை ஒதுக்கிக் கொண்டு,
கசிந்து வருவதே கண்ணீர் வெள்ளமாம்!

* * *

சென்றொரு நாட்டினை வென்று கொணர்ந்திடும்
செல்வமும் கண்ணீரே
திட்டுவ தும்தலை வெட்டுவ தும்சிலர்
செய்கையும் கண்ணீரே.

— நூல்: துறைமுகம்

தன்பொருள் தன்சுக மேபெரி தாமெனும்
தத்துவம் கண்ணீரே.
தாய்மொழி மீதபி மானமும் ஞானமும்
தாழ்ந்திடின் கண்ணீரே.

— நூல்: துறைமுகம்

மனத்துயர் எல்லாம் கண்ணீர்
மழைக்கொரு பருவ மன்றோ?

* * *

கசிந்து வருவது கண்ணீர்; அந்நீர்
உப்புக் காய்ச்ச உதவாத் தண்ணீர்.

* * *

கடல்நீரும் காவிரியும் வெள்ளங் காட்டும்.
கண்ணீரே கலங்கிடுவோர் உள்ளங் காட்டும்.

* * *

காதலிலே தோல்வியுற்றார் கண்ணீர் சொந்தக்
காரணத்தில் வெளியீடே யாகும். நோயின்
வேதனையால் அழுபவரின் கண்ணீர் "துன்பம்
விலகாதோ" எனக்கேள்வி கேட்கும் கண்ணீர்.

சோதனையே வந்தாலும் நாட்டுக் காகத்
துன்பத்தை வரவேற்போன் வடிக்கும் கண்ணீர்
மேதினியே பாராட்டும் கண்ணீ ராகும்!
விளம்பரக்கண் ணீர்விரைவில் வற்றிப் போகும்!

— நூல்: தேன்மழை

## முதுமை

காற்றின் முதுமை புயலாகும்
காயின் முதுமை கனியாகும்
நாற்றின் முதுமை கதிராகும்
நட்பின் முதுமை அன்பாகும்

* * *

ஓய்ந்தவர் முதுமை யெல்லாம்
உறக்கமாம்; கருமை பெற்ற
கூந்தலின் முதுமை யெல்லாம்
கொக்குவெண் நுரையாம்; செல்வம்
தேய்ந்தவர் முதுமை யெல்லாம்
தீராத வறுமை யாகும்.
மாந்தரின் முதுமை யெல்லாம்
மரணத்தின் இளமை யாகும்.

— நூல்: துறைமுகம்

## மரணம்

சிறந்தவர்கள் மரணத்தால் மறைந்த போதும்,
செத்தாரோ டவர்களைநாம் சேர்ப்ப தில்லை.
மறைந்தாலும் அவர்களைநாம் மறப்ப தில்லை.
மரணத்தை வென்றவர்கள் என்ப தாலே.

சிரிப்பவன் கவலையை மறக்கின்றான்
தீமைகள் செய்பவன் அழுகின்றான்
இருப்போம் என்றே நினைப்பவர் கண்களை
இறந்தவன் அல்லவோ திறக்கின்றான்.

— 'நீர்க்குமிழி' திரைப்பாடல்

தொகுப்பார் சிலரதைச் சுவைப்பதில்லை
தொடங்குவார் சிலரதை முடிப்பதில்லை
வகுப்பார் அதுபோல் வாழ்வதில்லை
வந்தவர் யாருமே நிலைத்ததில்லை.

— 'நீர்க்குமிழி' திரைப்பாடல்

பிறந்தோம் என்பதே முகவுரையாம்
பேசினோம் என்பதே தாய்மொழியாம்
மறந்தோம் என்பதே நித்திரையாம்
மரணம் என்பதே முடிவுரையாம்.

— 'நீர்க்குமிழி' திரைப்பாடல்

## பிணம்

இறந்த காலம் என்பதும் பிணந்தான்.

*　　*　　*

குற்றிய லுகரம் ஓசைக்
　குறுக்கத்தைக் காட்டும். ஈரம்
வற்றிய சருகு, சாவின்
　வடிவமாம் பிணத்தைக் காட்டும்

## இடுகாடு

மயானம் என்பது மாண்டோரைச் சுடுமிடம்
அங்கத்தை எரிக்கும் அடுப்பங் கரையது.
பற்பொடி வேண்டாத பற்களும், எலும்பும்
சிதறிக் கிடக்கும் சிறுபீட பூமி!

*　　*　　*

எத்தனை மனிதர்கள் எத்தனை மரணம்!
அத்தனை பேரும் கல் லறையிடம் சரணம்!

*　　*　　*

எத்தனை அறைகள் இருந்தும் நமக்கெல்லாம்
கல்லறை அதுவே கடைசி அறையாம்!
கடைசியறை யாகிய கல்லறை என்பது
பேச்சுமூச் சற்ற பிணத்தின்அவை யடக்கம்!

நாளும் கிழமையும் ஞானிகட் கில்லை.
நல்லவன் கெட்டவன் கல்லறைக் கில்லை.

## கண்டேன்

விண்மீது மேகத்தின் பந்தல் கண்டேன்
வேற்றுமையில் லாஉலகைக் கனவில் கண்டேன்
கண்களிலே, ஏற்றாத விளக்கு கண்டேன்
காதலிலே உடலணுக்கள் மகிழக் கண்டேன்.

— இதழ்: போர்வாள் (16-3-1957)

செந்தமிழில் பனிகண்டேன்; குளிர்ச்சி கண்டேன்;
செவ்வுதய சூரியனைக் கொடியில் கண்டேன்.
அந்திதனில் ஒளிஇரவு ஓட்டக் கண்டேன்.
அருவிதனில் மங்கையின்மே லாடை கண்டேன்.

— இதழ்: போர்வாள் (16-3-1957)

கற்பனையில் பெரும்புலமை
வெறிவளரக் கண்டேன்;
கண்களிலே கனவுகளின்
தாய்வீட்டைக் கண்டேன்.

— இதழ்: சுரதா (1-3-1968)

சந்திரனில் நீங்காத அழுக்கு கண்டேன்.
சரசத்தில் இளம்பருவ மயக்கங் கண்டேன்.

சந்தனத்தில் குளிர்கண்டேன்; வெப்பங் கண்டேன்.
சருகுதனில் ஈரத்தின் வறுமை கண்டேன்.
— இதழ்: போர்வாள் (16-3-1957)

ஆலைதனில் செங்கரும்பின் துயரங் கண்டேன்
ஆற்றோரம் கிளிப்பச்சை மரங்கள் கண்டேன்
ஓலைதனில் சுருள்கண்டேன்; ஏழை மக்கள்
உள்ளத்தை அவ்வோலைச் சுருளில் கண்டேன்.
— இதழ்: போர்வாள் (16-3-1957)

கற்றவர்தம் இதயத்தில் நூல்நிலையம் கண்டேன்
கண்ணீரில் ஏழைகளின் ஏக்கத்தைக் கண்டேன்.

## தன்னைப்பற்றி

சொந்தஅறி வோடெதையும் புதுமை யாகச்
சொல்வதுதான் என்வழக்கம்; திருட மாட்டேன்.
செந்தமிழின் ஆண்வடிவம் என்று என்னைச்
செறுக்கோடு நான்சொல்லிக் கொள்ளு கின்றேன்.

* * *

முதன்முதலில் தாய்ப்பாலின் இனிமை கண்டேன்;
முதிர்நிலவே! அதனால்நான் வளர்ச்சி பெற்றேன்.
அதற்குப்பின் செந்தமிழின் இனிமை கண்டேன்;
அதனாலே தமிழ்நாட்டில் கவிஞன் ஆனேன்.

புகழ்வெறி எனக்குப் புள்ளி யளவும்
இல்லை! சராசரிப் பொறாமையும் இல்லை!
நானொரு கவிஞன்! அதைவிட
நானொரு நல்லவன் இந்த நாட்டிலே!

* * *

எண்ணங்கள் தருபவனே சிறந்தோன்; கோழை
எனப்படுவோன் நூறுமுறை இறந்தோன்;
வாழ்வில்
கண்எனக்கு எதுவென்றால், தமிழ்தான்! நல்ல
கவிதைகளே என்மூச்சு, ..............

## அறிந்தேன்

பணப்பெருமை மீன்கிழிக்கும்
நீர்க்கோடென் றறிந்தேன்
பாரினிலே புகழொன்றே
நிலைத்திடுமென் றறிந்தேன்

— இதழ்: சுரதா (1-3-1968)

வென்றவரும் சிலசமயம் தோற்பரென்பதறிந்தேன்;
வெறும்பேச்சில் யாதொன்றும் விளையாதென்
றறிந்தேன்;
பொன்னெல்லாம் மண்வயிற்றின் கருவென்ப
தறிந்தேன்;
புகழெல்லாம் அறிவினலங் காரமென்ப தறிந்தேன்.

— நூல்: துறைமுகம்

## கருத்துக்கள்

திறமை முதலில் பிறந்தால்தான் புகழ்
பிறகு பிறக்கும்.

— சுரதா

மீனைப்போல் வளையவும், நெளியவும்
தெரியாத மனிதன் வாழ்வே முடிவதில்லை.

— சுரதா

வாழ்க்கைக்குக் காதல்தான் துறைமுகம்.

— சுரதா

வாழ்க்கை என்பது தூக்கம் என்றால்
காதல் என்பது கனவு.

— சுரதா

எதையாவது பெறவேண்டும் என்று
துடிப்பது ஆசை. எதையாவது தரவேண்டும்
என்று எண்ணுவது தியாகம்.

— சுரதா

சுவர்மீதில் ஒட்டிக்கொண்டிருக்கும் வெள்ளைச்
சுண்ணாம்புப் போன்றதுதான் பதவியாகும்.

— சுரதா

அன்புக்குத் தலைமை தாங்கும் மனிதன்
பிறர் அடித்தாலும் அணைப்பான். கண்ணீரைத்
துடைப்பான்.

— சுரதா

காதல் என்பது முதலில் மனமும். பிறகு
உடலும் செய்யும் நடவடிக்கை.

— சுரதா

நம்பிக்கைக்கு மதிப்பு தந்தால் - ஆராய்ச்சிக்கு
அங்கு வேலையே இல்லை.

— சுரதா

உவமை என்பது கற்பனையில் பிறப்பதல்ல,
நடைமுறையில் ஒத்து இருக்கும்ஒன்றோ
டொன்றைத் தொடர்பு படுத்திக் காட்டுவதே;
சங்க கால இலக்கியத்தில் இருக்கும் உவமை
அழுத்தத்தின் மரபு இடைக்காலத்தில்
கைவிடப்பட்டது. அதன் காரணமாகவே
கற்பனை வளர்ந்தது.

— சுரதா

எவன் அதிக ஆச்சரியப்படுவதை
நிறுத்திக் கொள்கிறானோ அவன் சீக்கிரத்தில்
புத்திசாலியாகி விடுகிறான்.

— சுரதா

ஒருபொருளைக் கையில் தூக்கியபடியே
அதன் எடையைக் கூறும் சாமர்த்தியசாலிகள்
உண்டு. அதே மாதிரி, ஒரு மனிதனை
ஒரே பார்வையால் அளந்தெடுத்து விடும்
விவேகிகளும் இருக்கிறார்கள்

தொடுப்பவன் தன் திறமையை வெளிப்படுத்து
கிறான். தொகுப்பவன், பிறர் திறமையை
வெளிப்படுத்துகிறான்.

— சுரதா

# உதவிய நூல்கள்

தேன்மழை

துறைமுகம்

சாவின்முத்தம்

சுவரும்சுண்ணாம்பும்

பட்டத்தரசி

தொடாதவாலிபம்

உதட்டில்உதடு

வார்த்தைவாசல்

அமுதும்தேனும்

# உதவியஏடுகள்

| நாளிதழ் | வார இதழ் |
|---|---|
| தினத்தந்தி | குமுதம் |
| தினமணி | ஆனந்தவிகடன் |
| மாலைமுரசு | கல்கி |
| தமிழ்நாடு | குங்குமம் |
| சுதேசமித்திரன் | இதயம்பேசுகிறது |
| முரசொலி | தினமணிகதிர் |
| போர்வாள் | இலக்கியம் |
| மாலைமணி | காவியம் |
| தென்னகம் | உரிமைவேட்கை |
| | தென்றல் |
| | முக்கனி |
| | இலட்சியவாதி |

## மாதமிருமுறை

ஊர்வலம்

சுரதா

## மாதஇதழ்கள்

காஞ்சி

குடும்பக்கலை

தீபம்

அமுதசுரபி

கலைமகள்